KALKI 1.11.92 ரூ. 3.00

# கல்கி



தென் சென்னைச் சிறப்பிதழ் :

"நகரத்தின் தூய்மைக்கு நாமெல்லாம் உதவ வேண்டும்!"

# உங்கள் கண்மணியின் கனவை கனவாகவே இருக்க விடாதீர்கள்

## குழந்தைகள் பரிசு வளரும் நிதி உதவி கொண்டு கனவை நனவாக்குங்கள்.



உங்கள் கண்மணிக்கு ஒரு பரிசை அளியுங்கள் அவனுடன் கூடவே வளரும் அப்பரிசு. யூனிட் ட்ரஸ்டின் குழந்தைகள் பரிசு வளரும் நிதியில் முதலீடு செய்யுங்கள். உங்கள் கண்மணி 21 வயதாகும் போது நீங்கள் முதலீடு செய்யும் அப்பணம் அவனுக்கு தேவைக்கேற்ப உதவும்.

ஒரு மொத்த தொகையை ஒரே தடவையாக பரிசளிக்கலாம். அல்லது சிறு சிறு தொகையாக வருடா வருடம் செலுத்தலாம். எப்படியாயினும் உங்கள் கண்மணி 21 வயதாகும் போது அவன் லட்சாதிபதியாவதை உறுதி செய்யலாம் (அவனுக்கு தேவையானால் 18 வயதாகும் போது பணத்தை எடுக்கும் அனுகூலமும் உண்டு.)

யூனிட் ட்ரஸ்டின் குழந்தைகள் பரிசு வளரும் நிதி. உங்களது சிறிது ஆலோசனை உங்கள் கண்மணியின் சிறந்த எதிர்காலத்தின் உத்தரவாதம்.

விண்ணப்ப பாரங்கள் யூனிட் ட்ரஸ்ட் கிளைகள், எல்லா பாங்குகள் மற்றும் கலெக்ஷன் சென்டர்களில் அங்கீகரிக்கப்படும்.

விண்ணப்ப பாரம் மற்றும் ப்ரோஷருக்கு ஏதேனும் யூனிட் ட்ரஸ்ட் கிளை முக்கிய பிரதிநிதி அல்லது ஏஜெண்டை அணுகவும்.

குழந்தைகள் பரிசு வளரும் நிதி

~~13%~~ 14% டிவிடெண்ட்

& 3 வருடத்திற்கொருமுறை போனஸ்



**யூனிட் டிரஸ்ட் ஆஃப் இந்தியா**

**Branch Offices:** • Madras Ph: 517101, 517178 • Coimbatore Ph: 210399 • Madurai Ph: 34597 • Trichy Ph: 27774




# தேடிவரும் ஓட்டல்கள்!

நாம் ஓட்டலுக்குப் போய்ச் சாப்பிடுவது போய், இப்போது ஓட்டலே நம்மிடம் வருகிறது! ஆம்! மொபைல் ஓட்டல்கள்! மாலை நாலு மணிக்கு பீச் பக்கம் போனால் கடகட கட்லெட், சமோசா, இட்லி, தோசை, பேல்பூரி என்று ஏகப்பட்ட ஐட்டங்களைப் பரிமாறுவார்கள். இரவு எட்டு மணிக்குப் பார்த்தால், தி. நகர் பனகல் பார்க் பக்கத்தில் தோசை, சப்பாத்தி, நூடுல்ஸ் என்று கடகட ரெடியாகிக் கொண்டிருக்கும். பெயர் : 'மீல்ஸ் ஆன் வீல்ஸ்' என்று டி. ராஜேந்தர் பாணியில்!

சென்னை நகரின் சமீபகால பிரசித்தங்களில் இந்த மொபைல் ஓட்டல்களும் ஒன்று. நாற்பதாயிரம் முதல், ஒன்னரை லகரம் வரை வசதிக்கேற்ப முதலீடு செய்து, செகண்ட் ஹாண்ட்டில் ஒரு வேனை வாங்கி விட வேண்டியது. அதன் வழக்கமான இருக்கைகளைக் கழற்றிப் போட்டு விட்டு, அடுப்பு மேடை, ஸ்டோரேஜ் வசதி என்று சில மாற்றங்களைச் செய்து, வேனின் மேல் பகுதியில் ஒரு 'சின்டெக்ஸ்' தண்ணீர்த் தொட்டியைப் பொருத்தி விட்டால் மொபைல் ஓட்டல் ரெடி. சென்னை முழுக்க சுமார் ஐம்பது இடங்களில் இதுபோல 'மொபைல்' ஹோட்டல்கள் வியாபாரம் நடத்துகின்றன.

இந்த மொபைல் ஓட்டல் நடத்துவதற்கு போலீஸ் லைசென்ஸ் உண்டு. இன்ன இன்ன இடத்தில் நிறுத்தி வியாபாரம் செய்வதாக முன்கூட்டியே எழுதிக் கொடுத்து அனுமதி பெற்றுக் கொள்ள வேண்டுமாம். ஜனங்களுக்குத் தொந்தரவு இல்லாத, போக்குவரத்துக்கு இடைஞ்சல் இல்லாத இடங்களில் தான் வியாபாரம் செய்யலாம்.

குறிப்பிட்ட நேரத்தில், குறிப்பிட்ட இடத்துக்கு வேன் வருகிறது. ஐந்தாறு பேர் மொத்தம். பக்கவாட்டு ஜன்னல்களைத் திறந்து ஒரு பகுதியை மேலே தூக்கி, இன்னொரு பகுதியை வெளிப்புறமாக நிறுத்தி, கவுண்டர் போலச் செய்து விடுகிறார்கள். கேஸ் அடுப்பை மூட்டி, மளமளவென்று வேலையை ஆரம்பிக்கிறார்கள். கூடவே கொண்டு வரும் ஜெனரேட்டர் உறும ஆரம்பிக்க, சில டியூப் லைட்டுகளும் பளீரிடுகின்றன. மொபைல் ஓட்டல் களை கட்டத் தொடங்கி விடுகிறது.

டிரைவர் சீட்டிற்குப் பக்கத்து சீட்டில் டோக்கன்கள், கேஷ் பாக்ஸ் சகிதம் உட்கார்ந்திருப்பவர் மளமளவென காசை வாங்கிப் போட்டுக் கொண்டு டோக்கன்களை வழங்குகிறார். டோக்கன்கள் பல்வேறு ஐட்டங்களைப் பெற்றுத் தருகின்றன. பிறகென்ன, சப்பு கொட்டிச் சாப்பிட வேண்டியதுதான்! இரவு பன்னிரெண்டு, ஒரு மணி வரை கூட ஜாம் ஜாம் என்று வியாபாரம் நடக்கிறது. சில மொபைல் ஓட்டல்களில் நான்வெஜ் ஐட்டங்களும் உண்டு.

பனகல் பார்க்கையொட்டி, அடுத்தடுத்து இரண்டு மூன்று மொபைல் ஓட்டல்கள். எல்லாவற்றிலும் வியாபாரம் கறுகறுப்பு என்பது கவனிக்கத்தக்கது. ''மழை நாட்களிலும் இருபது தேதிக்குப் பின்னாலும் கொஞ்சம் வியாபாரம் டல் அடிக்கும். சனிக் கிழமைகளில் ரொம்ப விறுவிறுப்பான வியாபாரம்!'' என்று கூறும் ஒரு மொபைல் ஓட்டல்காரர், ''சூப் வகைகளைக் கூடத் தயார் பண்ணிக் கொண்டு வந்து விடுகிறோம். கேட்டவுடன் சூடு செய்து கொடுத்து விடுவோம்'' என்கிறார்.

அடுத்தாற்போல ஒரு மாருதி வேன். அதில் திருநெல்வேலி அல்வா வியாபாரம். 'தினமும் திருநெல்வேலியிலிருந்து அல்வா வருகிறது பஸ் மூலமாக. ஒரிஜினல் திருநெல்வேலி அல்வா என்பதால் வியாபாரமும் சூடாய் இருக்கும்'' என்கிறார் மொபைல் அல்வாக் கடைக்காரர்.

பதினோரு மணிக்கு மேல் ஒரு அதிசயமான விஷயம் நடக்கிறது. சென்னை நகரில் பொதுவாக நம் கண்களிலேயே படாத கார்ப்பரேஷன் துப்புரவுத் தொழிலாளர்கள் வருகிறார்கள், சாப்பிட்டு விட்டுப் போட்ட இலைகளை அள்ளிக் கொண்டு போக!

– மௌஷ்மி

படம் : பாலாஜி

# "நகரத்தின் தூய்மைக்கு நாமெல்லாம் உதவ வேண்டும்!"

தென்-சென்னை பிரச்னைகளைப் பற்றி விவாதிப்பதற்காக, கட்டடப் பொறியியல் நிபுணர் சி. எச். கோபி நாதராவ், கலாக்ஷேத்திராவைச் சேர்ந்த கிருஷ்ணவேணி லட்சுமண், மருத்துவ நிபுணர் சந்திரசேகர சாண்டில்யா, தி.நகர் எக்ஸ்நோரா மகளிர் அணி பிரதிநிதி சுலோசனா ராமசேஷன் ஆகியோர் நடத்திய கலந்துரையாடலி லிருந்து, சில முக்கிய பகுதிகள் :

**கோபிநாத் :** நீங்கள் எக்ஸ்நோரா ஆரம் பித்ததன் நோக்கம் என்ன?

**சுலோசனா :** குப்பைகள் இல்லாமல் நகரத்தைச் சுத்தமாக வைத்துக் கொள்ளு வதுதான் முக்கிய நோக்கம். எங்கள் தலை வர் எம்.பி. நிர்மல், அந்தந்தத் தெருவாசி களே தங்கள் தெருக்களைச் சுத்த மாக வைத்துக் கொள்ள உதவும் அமைப்பை உரு வாக்க ஊக்கம் கொடுத்தார். இப் போது 471 தெருக் களில் இந்த அமைப்பு இருக் கிறது.

• கோபிநாதராவ்

**கிருஷ்ண வேணி :** சமுதா யத்தில் மேல் மட் டத்தில் இருப்ப வர்களுக்கு நல்வழி காட்டவே எக்ஸ்நோரா போன்ற அமைப்புக்கள் தேவைப்படுகிறது என்றால் கீழ்மட்டத்தில் இருப்பவர் களுக்கு?

**கோபிநாத் :** குடிசைவாழ் மக்களுக்குத் தினசரி வாழ்க்கையே ஒரு போராட்டம். கிடைக்கிற பணத்தில் எப்படி வயிற்றுப் பாட்டைக் கவனிப்பது என்பதே பிரச்னை யாக இருக்கிற போது, சுற்றுப்புறச் சுகா தாரம் அவர்களுக்கு இரண்டாம்பட்சம் தானே?

**டாக்டர் :** அதை மட்டும் காரணமாகச் சொல்ல முடியாது. நான் பதினாறு வருடங்க ளாக பிராக்டிஸ் பண்ணும் கிளினிக் ராயப் பேட்டையில் இருக்கிறது. சானிடேஷன், குடிநீர் வசதி இரண்டும் குறைவு. மழைக் காலத்தில் சாக்கடைத் தண்ணீர் தெருவெல் லாம் ஓடும். நானும் எம்.எல்.ஏ., எம்.பி. களிடம் முறையிட்டு விட்டேன். யாரும் எது வும் செய்ய முடியவில்லை. இரண்டாவது காரணம் சுற்றுப்புற சுகாதாரம் பற்றியோ சொந்த சுகாதாரம் குறித்தோ மக்களுக்குப் போதிய அளவு சுற்றுத் தரப்படவில்லை. அறியாமையினால் மாடு வைத்திருப் பவர்கள் சாணத்தையும், வைக்கோலையும் கலந்து வெளியேற்றுவதால், அவை சாக் கடைகளை அடைத்துக் கொள்ளுகின்றன.

**கிருஷ்ணவேணி :** வெள்ளைக்காரன் காலத்தில் கட்டிய பாதாளச் சாக்கடைகள் போதவில்லை, சரி. ஆனால் இப்போது உருவான பொன்நகர், சாஸ்திரி நகர் எல்லாம் கூட அப்படித்தானே இருக்கிறது?

**கோபிநாத் :** காந்தி நகரில் அன்றைக்கு வசதிகள் செய்து கொடுத்த போது, 400 குடும்பங்கள்தான் இருந்தன. இன்று ஒவ் வொரு மனையிலும் 40 குடும்பங்கள் இருக் கின்றன. அப்படி பல மாடிக் கட்டடங் களாக மாறி விட்டன. எம்.எம்.டி.ஏ. அதி காரிகள் கூற்றுப்படி, ஒரு நகரின் பொரு ளாதார, சமூகச் சூழலை அப்போதைக்கு மட்டும் மனத்தில் கொள்ளாமல், வருங்காலத் தையும் எண்ணிப் பார்த்துத் தான் மாஸ்டர் பிளான் போட வேண்டும். அதன் பிறகு, விதிகளை அனுசரிப்பதி லும் அத்துமீறல் கள் இருக்கவே கூடாது. இதெல் லாம் நடைமுறை யில் பின்பற்றப் படுகிறதா என்பதுதான் கேள்வி.

• கிருஷ்ணவேணி லட்சுமண்

**கிருஷ்ணவேணி :** பசு, எருமை மாடு களை சிடிக்குள்ளிருந்து வெளியேற்றினால் சுகாதாரம், டிரெயினேஜ் அடைப்பு இரண்டு பிரச்னைகளும் தீருமே?

**கோபிநாத் :** எத்தனையோ அதிகாரிகளும், அமைச்சர்களும் முயன்று பார்த்து விட்டனர். நடக்கவில்லை. மேலும், 'ஆவின்' பால் சப்ளை நகரில் போதுமான அளவுக்கு இல்லாததும் ஒரு காரணம்.

**டாக்டர் :** நகரின் ஜனத்தொகை கூடிக் கொண்டே போகிது... வேலை தேடி நகருக்கு வருபவர்கள் அதிகரித்துக் கொண்டே போகிறார்கள்...

**கோபிநாத் :** இப்போது நகரின் ஜனத் தொகை சுமார் 42 லட்சம். 2002ல் தொண்ணூறு லட்சமாகலாம் என்பது மதிப்பீடு. தகவல் தொடர்பு வசதிகள் பெருகியாகி விட்ட இந்தக் காலத்தில், எதற்கு எல்லா அலுவலகங்களும் நகரின் மத்தியிலேயே இருக்க வேண்டும்? பெரிய பெரிய ஓட்டல்கள் எல்லாம் எதற்கு தென்சென்னையின் உள்ளேயே இருக்க வேண்டும்? புற நகர்களில் உருவாகலாமே? பத்து வருடங்களுக்கு முன்னால் 'மடிப்பாக்கமா?' என்று மலைத்தார்கள். இப்போது மக்கள் அங்கே வாழவில்லையா என்ன?

**கிருஷ்ண :** திருவான்மியூரிலிருந்து அடையாறுக்கு வர லாட்டிஸ் பிரிட்ஜ் ரோடுக்கு இணையாக ஒரு பாதை இருக்கிறது. அதை ஏன் டெவலப் செய்யவில்லை? அதே மாதிரி இந்திரா நகர் வாட்டர் டாங்கிலிருந்து, பாலிடெக்னிக் போகிறதே அந்தச் சாலையில் கூட இரண்டு மூன்று பாலங்கள் கட்டினால், அல்லது இருப்பதை அகலப் படுத்தினால், போக்குவரத்து நெரிசல் அந்தப் பகுதிகளில் கணிசமாகக் குறையும்.



✱ சுலோசனா ராமசேஷன்

**கோபிநாத் :** அவ்வளவு எளிதில்லை. நிலத்தைக் கையகப்படுத்த வேண்டும். நஷ்டஈடு நிர்ணயித்து, அதை நிலத்தின் உரிமையாளர் ஏற்காத போது நீதிமன்றம் சென்று நிறுத்தி விட முடியும்.

**டாக்டர் :** இன்னும் 30 வருடங்கள் கழித்துக் கொடுக்கும் அதிகத் தொகையைப் பார்க்க, இன்றே சற்று கூடுதலாகக் கொடுத்து எடுத்துக் கொண்டு விடலாமே?

**கோபிநாத் :** மகாராஷ்டிராவில் சட்டம் கடுமையாக உள்ளது. அக்வயர் பண்ணிவிட்டால் வேலையை ஆரம்பித்து விடலாம். நஷ்டஈட்டுத் தொகை பிறகுதான் வரும். இங்கே அப்படி இல்லை. சில சட்டங்களைத் திருத்தி அமைத்தால்தான் முடியும்...

**சுலோசனா :** குடிசைப் பகுதிகளில் சுகாதாரப் பிரச்னையைச் சரிசெய்யாமல், தூய்மையைப் பற்றி நாம் எதுவும் பேச முடியாது.



✱ டாக்டர் சந்திரசேகர சாண்டில்யா

**டாக்டர் :** உண்மைதான். அவர்கள் இரவு ஒரு மணி இரண்டு மணிக்குத்தான் ஒதுக்குப்புறமாகப் போக முடிகிறது.

**சுலோசனா :** மொபைல் டாய்லெட் திட்டத்தை இங்கே எல்லாம் அறிமுகப்படுத்தலாமே?

**கோபிநாத் :** நல்ல ஐடியா. பூனாவில் இது நடைமுறையில் இருக்கிறது.

**சுலோசனா :** நாங்கள் 'கம்யூனிடி எக்ஸ்நோரா' ஆரம்பித்து, அவர்களிலேயே ஒரு தலைவர், ஒரு செயலாளர் எல்லாம் தேர்ந்தெடுத்து, நடத்தச் சொல்லுகிறோம். ஒரு தடவை விஜயராகவா ரோடிலிருக்கும் குடிசைப் பகுதிக்கு மனோரமாவையும் அழைத்துச் சென்றேன். நாம் சொன்னால் கேட்க மாட்டார்கள்; சினிமாக்காரர்கள் சொன்னால் கேட்கிறார்களே, அதனால். மனோரமாவும் நானும் இரண்டு, மூன்று வீட்டைச் சுத்தம் பண்ணி எப்படி வைத்துக் கொள்ளுவது என்று காண்பித்தோம். நல்ல பலன் இருந்தது. ஆக அவர்களை மோடிவேட் பண்ணித் தூண்டலாம். நிச்சயம் அவர்களும் ஒத்துழைப்பார்கள். குப்பைகளைக் குவிக்காமல், எக்ஸ்நோரா வண்டி வரும் போது அதில் போடச் சொல்லலாம். ஒரு வருடப் பிறப்பு அன்று, குடிசைப் பகுதி ஒன்றில் ஒரு கோலப் போட்டி வைப்பதாகச் சொல்லியிருந்தோம். கிரியப்பா ரோடில் உள்ள சுமார் நூறு குடிசை வாசல்களையும் முன்னால் சுத்தப்படுத்தி, அழகழகாகக் கோலம் போட்டு, போட்டியில் கலந்து கொண்டார்கள்.

**கிருஷ்ண :** இவர்கள் மருத்துவ உதவிக்கு எங்கே போகிறார்கள்?

**டாக்டர் :** கவர்ன்மென்ட் ஆஸ்பத்திரி தான். ஆனால் இங்கே நகரில் அதிர்ஷ்டவசமாக மிகக் குறைந்த அளவில் ரூபாய் வாங்கிக் கொண்டு வைத்தியம் பார்க்கும் ஜெனரல் பிராக்டிஷனர்கள் இருக்கிறார்கள். அதனால் பெரும்பாலான குடிசைவாசிகள் கூட இந்த டாக்டர்களை நாடி வருகிறார்கள்.

**கல்கி :** தென் சென்னையில்தான் பெரிய பெரிய மருத்துவமனைகள் நிறைய வந்து கொண்டிருக்கின்றன...

**டாக்டர் :** அவை எல்லாம் மல்ட்டி-ஸ்பெஷாலிடி ஹாஸ்பிடல்கள். அந்தச் செல

வைத் தாங்கிக் கொள்ளத் தயாராக இருப்பவர்கள் இங்கே இருக்கிறார்கள்.

**கிருஷ்ணா :** இவை எல்லாமே பணக்காரர்களுக்குத்தான்!

**டாக்டர் :** நான் பிராக்டிஸ் பண்ணும் இடத்தைச் சுற்றி நிறைய குடிசைவாசிகள் இருக்கிறார்கள். அடுத்த வேளைச் சாப்பாட்டுக்கு என்ன செய்வது என்று யோசிப்பவர்கள். இவர்கள் என் கிளினிக்கை நாடி வரும் போது நான் சிகிச்சை அளித்துத்தான் ஆக வேண்டும்.

**கோபிநாத் :** இந்த மல்ட்டி ஸ்பெஷாலிடி மருத்துவமனைகளில் ஏழைகளுக்குச் சிகிச்சை கிடைக்க வழி இல்லையோ? ஒரு குறிப்பிட்ட சதவிகித நோயாளிகளுக்கு இலவசம் என்று எதுவும் வசதி இல்லையா?

**டாக்டர் :** எதற்கு அங்கே எல்லாம் போக வேண்டும்? ஜி.ஹெச்.சில் கிடைக்காத சிகிச்சையா? காஸ்ட்லி மருந்துகள் - 4 ரூபாய், ஐந்து ரூபாய் விலையுள்ள இதய நோய்க்கான மருந்துகள் - ஜி.ஹெச்.சில் ஏழைகளுக்கு இலவசமாகவே கிடைக்கின்றன. அமைச்சர் பெருமக்கள் உடல்நலம் குன்றினால், எதற்குத் தனியார் மருத்துவமனைக்குச் செல்ல வேண்டும்? தமது அரசு நடத்தும் பொது மருத்துவமனை மீது நம்பிக்கை இல்லாது போவதேன்? இந்த மனநிலையும், போக்கும் மாற வேண்டும்... ஜி.ஹெச்.சில் தினசரி மூன்று கிட்னி டிரான்ஸ்பிளான்ட் செய்கிறார்கள் என்ற செய்தி எத்தனை பேருக்குத் தெரியும்?

**கிருஷ்ணா :** எங்கள் வீட்டு வேலைக்காரி, எபிலெப்ஸி மருந்து வாங்கிக் கொள்ள, திருவான்மியூரிலிருந்து எப்படி ஜி.ஹெச்.க்கு வந்து போக முடியும்? மாத்திரை இலவசம்தான். ஆனால் போக்குவரத்துச் செலவு ஏகமாக ஆகிறதே?

**டாக்டர் :** நகரைச் சுற்றி, பத்துப் பதினைந்து சிறு சிறு மருத்துவமனைகள் உருவானால்தான் இந்தப் பிரச்னை தீரும். பிரைமரி ஹெல்த் சென்டர் அளவில் இருந்தால் கூடப் போதும். ஜி.ஹெச்.சில் கூட்டமும் குறையும்.

**கோபிநாத் :** டாக்டர், ஒரு சந்தேகம். சம்ப், ஓவர்ஹெட் டாங்க் என்றெல்லாம் தண்ணீர்த் தொட்டி கட்டுகிறார்கள். இவற்றை முழுதும் மூடி விட வேண்டும் என்றும்; காற்றும் வெளிச்சமும் கொஞ்சம் படுகிற மாதிரி சிறிதளவு திறந்து வைக்க வேண்டுமென்றும் இரண்டு கருத்துக்கள் இருக்கின்றனவே? எது சரி?

**டாக்டர் :** மூடி விட வேண்டும்.

**கோபிநாத் :** அப்போது நாற்றம் இருக்காதா?

**டாக்டர் :** அவ்வப்போது சம்ப்பையும், டாங்க்கையும் சுத்தம் செய்து விட வேண்டும்! இது முக்கியம்.

**கோபிநாத் :** எத்தனையோ பிரச்னைகள் இருந்தாலும் அவற்றை மறந்து வாழ்க்கையை அர்த்தமுள்ளதாக்குவது கலைகள் தாம்...

**கிருஷ்ணா :** தென் சென்னையில்தான் நிறைய சபாக்களும் கலைஞர்களும் இருக்கிறார்கள். ஆனால் கலாக்ஷேத்திரா போன்ற குழுக்கள் நாட்டிய நாடகம் வழங்குவதற்கு ஏற்ற அரங்கங்கள் குறைவு. இருபது பேர் ஒரே சமயத்தில் பங்கு கொள்ளும் நிகழ்ச்சி என்றால், அதற்குத் தகுந்த மேடை கிடையாது...

**டாக்டர் :** ஏன், உங்கள் கலாக்ஷேத்ரா ஆடிடோரியம் இருக்கிறதே?

**கிருஷ்ணா :** அது மட்டும் போதுமா? ரொம்பத் தள்ளி இருப்பதால், மக்கள் வந்து போக அசௌகரியமாக இருக்கிறது. டிசம்பர் சீசனில் பஸ் வசதி செய்து கொடுக்கிறோம். அதனால் கூட்டம் வருகிறது.

**டாக்டர் :** அதே போல்தான் பல்வேறு கலைகளில் ஆர்வம் உள்ளவர்கள் கூட ஒரு நல்ல ஆசானிடம் பயில வெகுதூரம் செல்ல வேண்டியிருப்பதை நினைத்து அந்த ஆர்வத்தை வளர்த்துக் கொள்ள முடியாமல் போகிறது.

**கிருஷ்ணா :** நாங்கள் தயார். எங்களிடம் உள்ள நடன, இசைக் கலைஞர்களை இந்த இடத்தில், இத்தனை மணிக்கு வந்து சொல்லிக் கொடுங்கள் என்று கேட்டுக் கொண்டால் நிச்சயம் செய்வோம். அவர்களுக்கு ஒரு வருமானமும் கிடைக்கும்.

**டாக்டர் :** நீங்கள் சொன்ன மாதிரி நிறைய கலைஞர்கள் அந்தந்தப் பகுதியில் வகுப்புகள் எடுக்கலாம். அதே போல வாரம் ஒரு மணி நேரம் இலவச மருத்துவ சேவை செய்ய டஜன் கணக்கில் டாக்டர்களும் தயாராய் இருக்கிறார்கள்.

**கோபிநாத் :** ஆக மொத்தம் நாம் தேவையையும் வசதியையும் இணைக்க வேண்டும். அப்படிச் செய்தால், இல்லாத இடத்துக்கு வசதியும் கிடைக்கும். வாழ்க்கை முறையில் முன்னேற்றமும் உண்டாகும்.

தொகுப்பு : **சாருகேசி**
அட்டை வண்ணப்படமும் புகைப்
படங்களும் : **யோகா**

# அழகு நகருக்குச் சிலகோடி செலவு!

ஒவ்வொரு நாளும் என் மனைவி, அவளுடைய நோக்கில் அன்றைய முக்கிய செய்தியை ஒரு அலசு அலசாமல் விட மாட்டாள். முறுக்கிப் பிழிந்து தருவதை, உதறி உலர்த்த வேண்டியது என் பொறுப்பு.

''அரசாங்கம் கோடிக் கணக்கில் செலவு செய்யப் போகிறார்களாம் - நகரை அழகு படுத்த'' என்றாள் ஒரு நாள். அப்போது அவள் முகத்தைப் பார்க்க வேண்டுமே, புதிதாய் நிறுவிய ஹாலஜன் லாம்ப்தான்!

''பிரமாதம்!'' என்றேன். அப்படியானால் பாதாளச் சாக்கடைகளில் திறந்து கிடக்கிற மேன்-ஹோல்களை எல்லாம் சீக்கிரமே மூடிவிடுவார்கள் என்று சொல்!''

''அதற்கென்ன அவசியம் வந்தது இப்போது? மேன்-ஹோல் என்று பெயர் வைத்துவிட்டு ஒரு 'மேன்' கூட அதில் விழாமல் போனால் எப்படி?''

''அதற்கென்று அப்படியே திறந்து வைத்துவிடுவதா!''

''இதோ பாருங்கள், மாடு, பூனை, நாய், குறைந்தபட்சம் எலிகூட அதில் விழுந்ததாகச் செய்தி இல்லை. மனிதர்கள் மட்டும்தான் முட்டாள்தனமாக விழுகிறார்கள். இவர்கள் மடத்தனத்துக்கு மேன்-ஹோல் என்ன செய்யும்? அதனால் அதை எல்லாம் போய் மூடிக் கொண்டிருக்க வேண்டிய அவசியமில்லை.''

மேன் - ஹோலைத்தான் மூடவில்லை; நான் என் வாயையாவது மூடிக் கொண்டிருக்கலாம்! அவ்வளவு சாமர்த்தியம் எனக்கேது?

''அப்படியானால் சரி, இனிமேல் எல்லாத் தெரு விளக்குகளும் பளீரென்று எரியும் என்று சொல்லு!'' என்று கூறி வைத்தேன்.

''எல்லா விளக்குகளும் ஒழுங்காக எரிந்தால் அப்புறம் இரவின் இயற்கை அழகை யார் ரசிக்க முடியும்? பூரண சந்திரன் கூட இன்னொரு ஹாலஜன் லாம்ப் ஆகி விடுமே. அதனால் விளக்கு எரிகிற இடத்தில் மட்டும் நகரின் அழகை ரசித்தால் போதும். எரியாத விளக்குக் கம்பத்தின் அலுமினியப் பளபளப்பை, பகலில் ரசிக்கலாம். அதில் கலர் கலராகக் கட்சிக் கொடி, தோரணங்கள் கட்டியிருப்பதைப் பார்த்துப் பார்த்து மகிழலாம்!''

''சரி. சரி.'' என்று முணுமுணுத்தேன். ''ரோட்டை ஒட்டி எத்தனை குடிசைகள் முளைத்துவிட்டன. அவை எல்லாம் அகற்றப்பட்டுவிடுமோ?''

''குடிசைப் பகுதிகள் எங்கேதான் இல்லை? பம்பாயில் இருக்கலாம், தில்லியில் இருக்கலாம், கல்கத்தாவில் இருக்கலாம். சென்னையில் மட்டும் இருக்கக் கூடாதா? மேலும் நிழலின் அருமை வெயிலில் தெரியும் என்பதுபோல், குடிசைகள் இருந்தால்தானே குபேரக் குடியிருப்புகளின் அழகை எடுத்துக் காட்டும்!''

''ஓகே. ஓகே. மழைக் காலத்தில் தெருவெல்லாம் அப்படியே தண்ணீர் தேங்கி நிற்கிறதே. அதையெல்லாம் சரி பண்ணி விடுவார்களா?''



''அழகுதான் போங்கள்! தொட்டதற்கெல்லாம் ஃபாரின் அழகைப் பார் என்று சொல்ல வேண்டியது. நம் ஊரே கொஞ்சம் வெளிநாடு மாதிரி இருந்தால் கூப்பாடு போட வேண்டியது. ஏன், வெளில் மாதிரி இருக்கிறதே என்று கொஞ்சம் சந்தோஷப் படத் தெரிந்து கொள்ளுங்களேன்!''

''ரொம்ப சரி. அப்போ காய்கறி வாங்கப் போகிற போது முட்ட வருகிற மாடுகள், போக்கு வரத்துக்கு இடைஞ்சலாகக் குறுக்கே படுத்திருக்கும் மாடுகள் எல்லாம் இனி இருக்காது என்று சொல்!''

''ஓ, அதுவா! அதெல்லாம் ஸ்பீடு-பிரேக்கர் மாதிரிதானே? இருந்துவிட்டுப் போகட்டுமே? எத்தனை விபத்துகள் அவைகளால் தடுக்கப்படுகின்றன.''

''வாஸ்தவம்தான். அப்படியானால் கொசுத் தொல்லையாவது போய்விடுமா இனிமேல்?''

''அதை அப்புறப்படுத்து. இதை ஒழி என்று என்ன ஒரே நெகடிவ் அப்ரோச் வேண்டிக் கிடக்கிறது? கொசு ஆஃப்டர் ஆல் எத்தனை சின்னது! அதற்குப் பயந்து ஒரு பெரிய திட்டம் போட்டு கோடிக் கணக்கில் பணத்தை வீணடிக்க வேண்டுமா?''

''சரி. பிரம்மாண்ட கட்அவுட் எல்லாம் எடுத்து விடுவார்களோ? சில பேர் அது மேல் எல்லாம் ஏறி, இறங்கவே மாட்டேன் என்கிறார்கள்; 'குதித்து உயிர் விடுவேன்' என்று பயமுறுத்துகிறார்கள். இன்னும் சில கட் அவுட்கள் வளைந்து ஒடிந்து, சாலையோடு போகிறவர்கள் மேல் விழுந்து தொலைக்கிறது....''

ஒரு முறை முறைத்தாள் என் மனைவி.

''கலாசாரம் வளருணும் வளருணும் என்று ஒரு பக்கம் கத்துவது. கட் அவுட் கலாசாரம் மட்டும் ஒரு கலாசாரம் இல்லையோ? பச்சை, நீலம், சிவப்பு என்று கலர் கலராக எத்தனை வர்ணங்களில் உங்கள் கண்ணுக்குக் குளிர்ச்சியாக, பார்த்துப் பார்த்து வைக்கிறார்கள்! அதில் குறை சொல்ல வந்து விட்டீர்களே!''

''இல்லை... வந்து... கோபித்துக் கொள்ளாதே...''

''போதும், நிறுத்துங்கள். ஒரு சில கோடி ரூபாய்களையாவது செலவழித்து நகரத்தை அழகு படுத்துவோம் என்றால் விட மாட்டீர்களே! அதைப் பண்ணலியா இதைத் திருத்தலியா என்று நூறு கேள்வி, நூறு குடைசல்... அழகுபடுத்த எத்தனை கோடி ரூபாய் செலவழிக்கிறார்கள் என்று பாருங்கள்!''

''செலவு இருக்கும்; அழகு இருக்குமா?'' - கேட்க நினைத்தேன்; கேட்கவில்லை. வயிறு பசிக்க ஆரம்பித்து விட்டதே!

- சித்தார்த்





# ஸ்ரீ கந்தசுவாமி
# பர்மனெண்ட் பண்ட் லிமிடெட்

பதிவு அலுவலகம் : 60, சாமி பண்டாரம் தெரு
சிந்தாதிரிப்பேட்டை, சென்னை 2

துவக்கம் : 1990
பதிவு எண்: 19722

## பிக்சட் டிபாசிட் திட்டம்

| 46 நாள் | 90 நாள் | 6 மாதம் | 1 ஆண்டு | 2 ஆண்டு | 3 ஆண்டு | 4 ஆண்டு | 5 ஆண்டு* |
|---|---|---|---|---|---|---|---|
| 13% | 14% | 15% | 17% | 18% | 18.5% | 19% | 20% |

*குறைந்த அளவு டிபாசிட் ரூ. 20,000/– காலம் 5 ஆண்டுகள். மாத வட்டிக்கான செக்குகள் முன் கூட்டியே கொடுக்கப்படும்.

**சேவிங்ஸ் கணக்குகள் மீது 9.5% வரை வட்டி உங்கள் டிபாசிட்டுகள்**
**45 மாதங்களில் 2 மடங்காகிறது 90 மாதங்களில் 4 மடங்காகிறது**

## காமதேனு மணி பேக் திட்டம்

பிரதி மாதம் ரூ.100/– வீதம் தொடர்ந்து 15 வருடம் செலுத்துவீர்
5–ம் ஆண்டு முடிவில் ரூ. 6000/– ஐத் திரும்பப் பெறுவீர்
10–ம் ஆண்டு முடிவில் மீண்டும் ரூ. 6000/– ஐத் திரும்பப் பெறுவீர்
15–ம் ஆண்டு முடிவில் மிகப் பெருந்தொகையாக ரூ. 50,000/– பெறுவீர்

## பென்ஷனர் நலத்திட்டம்

சேமிப்பு ரூ. 13,000/– வட்டி வீதம் – **19%** கால வரம்பு 12 மாதங்கள் காசோலைகள் முன்னதாகவே வழங்கப்படும். முதியோர்களும், விதவைகளும், உடல் ஊனமுற்றோர்களும் மற்றும் கல்வி, சமய அறக்கட்டளைகளும் சேர்ந்து பயன் பெறலாம்.

## ரெக்கரிங் டிபாசிட் திட்டம்.

| பிரதி மாத டிபாசிட் | ரூ. 25/–ம் அதன் பெருக்கமும் பெற்றுக் கொள்ளப்படும் மாதங்கள் முடிவில் கிடைக்கும் தொகை | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| | 12 | 24 | 36 | 48 | 60 | 72 | 84 |
| ரூ. 25 | 330 | 715 | 1,180 | 1,800 | 2,510 | 3,350 | 4,370 |
| ரூ.100 | 1,320 | 2,860 | 4,720 | 7,200 | 10,050 | 13,400 | 17,500 |

## செல்வக்களஞ்சியம் டிபாசிட் திட்டம்

உங்கள் குழந்தையைக் குபேரனாகக் காண ஆசையா! இதோ
ரூ. 7500/– ஐச் செலுத்தி 15 வருட முடிவில் ரூ. 1,20,000/– பெறலாம்
ரூ. 9000/– ஐச் செலுத்தி 15 வருட முடிவில் ரூ. 1,44,000/– பெறலாம்

கடன் வேண்டுமா? எங்களை அணுகுங்கள், நகைக்கடன் சவரனுக்கு ரூ. 2400/– வட்டி விகிதம் ரூ. 1.65 கடனுக்கு உச்சவரம்பு இல்லை. தருவதில் தாமதமில்லை. R.D கட்ட வேண்டியதில்லை...

(Friday Weekly Holiday)
பங்குதாரர்களுக்கு மட்டும்: Business Hours,
Week Days 9.00 A.M - 12.00 Noon.
&
2.30 P.M - 6.00 P.M
Sunday 9.00 A.M. 12.00 Noon.

சேர்மன்
**P. பாலசுப்பிரமணியம்,** B.Sc.,
சீனியர் டிரஸ்டி – ஸ்ரீ கந்தகோட்டம்,
சென்னை – 3.

SURESH

– சேமிப்பே செழிப்புக்கு வழிகாட்டி –

"பாண்டி பஜார், உஸ்மான் சாலை, ரங்கனாதன் தெரு ஆகிய இடங்களில் உள்ள நடைபாதைக் கடைகள், மக்கள் நடந்து செல்லுவதற்கு மிகவும் இடையூறாக உள்ளன. ஆனால், உங்களைப் போன்றவர்களின் ஆதரவு பலமாக இருப்பதால் மாநகராட்சி, மற்றும் காவல் துறை அவர்களை அகற்ற முடிவதில்லை என்று சொல்கிறார்கள். மேலும், அந்த வியாபாரிகள் தினமும் குறிப்பிட்ட தொகையை ஆளும் கட்சி அரசியல்வாதிகளுக்கு லஞ்சம் தருவதாகவும் சொல்கிறார்கள்..."



★ ஜெயக்குமார்

- இப்படிக் கேட்டவுடன், தியாகராய நகர் தொகுதி சட்டமன்ற உறுப்பினர் ஜெயக்குமாரின் முகமானது சிவந்து போயிற்று.

"இதோ பாருங்க ஸார். யாரிடமிருந்தும் பைசா வாங்க வேண்டிய அவசியம் எனக்கில்லை. இன்னமும் சொல்லப் போனால், எம்.எல்.ஏ.வாக இல்லாவிட்டால் கூட ஸ்டாண்டர்ட் 2000 காரில் போய்க் கொண்டிருப்பேன். அந்த அளவுக்கு எனக்கு வசதி உண்டு. இப்போது அப்படிச் சென்றால் கொள்ளையடிச்சுட்டான் என்று மக்கள் பேசுவார்கள். அதனால் அடக்கமாக அம்பாஸிடரில் போகிறேன்..."

ஜெயக்குமாருக்குச் சொந்த ஊர் திருவையாறு. பள்ளியில் படிக்கும் போது உரிமைக் குரல் எம்.ஜி.ஆர். மன்றம் துவங்கியவர். ஜெயலலிதாவின் உறுதியான ஆதரவாளராக இருந்ததால் கட்சியில் பல தொந்தரவுகளைச் சந்தித்தவர். "அரசியலில் சாதாரண ஆளான என்னைச் சட்டமன்ற உறுப்பினராக்கிய பெருமை அம்மாவுக்குத்தான். என் உயிருள்ள வரை அம்மா ஆதரவாளனாகத்தான் இருப்பேன்" என்கிறார் ஜெயக்குமார். மருந்துகள் தயாரிக்கும் நிறுவனத்தில் இயக்குனராகவும் இருக்கிறார் இவர்.

தியாகராய நகர் தொகுதி படித்த மக்கள் நிறைய வாழும் தொகுதியாக இருப்பதால்

# ஜெயக்குமார் தெரிவிக்கும் ஆச்சர்ய விஷயங்கள்!



★ தி. நகர் ரயில்வே பார்டர் ரோடு : மினி கொத்தவால் சாவடி...




● மேட்லி ரோடு பாலம் - எப்போது முடியுமோ?

நிறைய புகார் கடிதங்கள் வருகின்றனவாம். வரும் புகார்களை ஒரு ரிஜிஸ்தரில் எழுதி நம்பர் கொடுக்கிறார்கள். ஆவின், மெட்ரோ வாட்டர், மாநகராட்சி என்று தனித்தனி கோப்புகள். எட்டு முழு நேரத் தொண்டர்கள் ஜெயக்குமாருக்கு உதவுகிறார்கள்.

''எதாவது சாக்கடை அடைப்பு, குடிதண்ணீர்ப் பிரச்னை என்றால் சம்பந்தப்பட்ட அதிகாரிகளுக்குப் போன் செய்துவிட்டு முதலில் நான் போய் ஸ்பாட்டில் நிற்பேன். காரியம் முடிந்த பின்தான் இடத்தை விட்டு நகர்வேன்'' என்று சொல்லும் ஜெயக்குமார், நன்றி தெரிவித்து வந்த ஏராளமான கடிதங்களை எடுத்துக் காட்டுகிறார்.

பல்லாண்டுகளாகவே தீர்க்கப்படாத பிரச்னைகள் இப்போது முடிவுக்கு வர இருக்கின்றனவாம். அஜீஸ் நகர் பகுதியில் மழை பெய்தால் இடுப்பளவு தண்ணீர் நிற்குமாம். இப்போது மழை நீர் வடிகால்கள் கட்டப்பட்டு வருகின்றனவாம். தொகுதியில் பல்வேறு இடங்களில் குடிசை மாற்று வாரிய வீடுகளும் கட்டப்பட்டு வருவதாகச் சொல்கிறார்.

''சந்தோஷமான விஷயம் என்னவென்றால் மேட்லி ரோடு கரங்கப்பாதை வேலை விரைவில் முடியும். தடங்கல்கள் நீக்கப்பட்டன. மற்றும், பிளி கொத்தவால் சாவடியாக இருக்கும் ரெயில்வே பார்டர் ரோடு, ரங்கனாதன் சாலை இரண்டிற்கும் கான்க்ரீட் சாலைகள் போடுவதற்கு சாங்ஷன் ஆகிவிட்டது!''

நடைபாதை வியாபாரிகளால் மக்களுக்கு உள்ள சிரமம் தமக்கும் தெரியும் என்று சொல்லும் ஜெயக்குமார், ஆச்சர்யமான ஒரு விஷயத்தையும் சொன்னார். ஒரு பிரபல ஜவுளிக் கடையின் முன்பு பாதையில் வைக்கப்பட்டிருந்த பூக் கடைகளை அகற்ற இவர் நடவடிக்கை எடுத்தாராம். அதன்படி மாநகராட்சியும் அகற்றி விட்டதாம். ஆனால் அடுத்த நாளே ஜவுளிக் கடை ஆட்கள் திரண்டு வந்து 'பூக்கடைகளை வைக்க அனுமதி கொடுங்கள்' என்றார்களாம்!

''கிட்டத்தட்ட இதே நிலைதான் ரங்கநாதன் தெருவிலும். கடைக்காரர்களுக்குத் தெரிந்தவர்கள்தான் பாதையில் கடை வைத்திருக்கிறார்கள். இருந்தாலும் நடைபாதை வியாபாரிகளுக்கு, ரங்கனாதன் தெருவுக்கும் - நடேசன் தெருவுக்கும் இடையே உள்ள சந்தை ஒதுக்கித் தரணும் என்றிருக்கிறோம்'' என்கிறார் ஜெயக்குமார்.

''என் தொகுதியில் உள்ள ரேஷன் கடைகள் நல்ல முறையில் இயங்கும். காரணம், நான் எந்த நேரத்திலும் சோதனை செய்ய வருவேன் என்ற பய உணர்வுதான். தில்லுமுல்லு செய்த எட்டு, டி.யூ.சி.எஸ். பணியாளர்களை தாற்காலிக வேலை நீக்கம் செய்திருக்கிறோம். இத்தனைக்கும் டி.யூ.சி.எஸ். தொழிலாளர் சங்கத்தின் தலைவர் நான்'' என்று கூறுகிறார் ஜெயக்குமார். தொகுதியில் கள்ளச் சாராயமே கிடையாதாம்!

''சென்னை நகரை அழகுபடுத்துவது என்ற திட்டத்தின் அடிப்படையில் நகர் முழுவதும் நடைபாதை ஆக்ரமிப்புகளை அகற்றும் முயற்சியில் அரசு இறங்கினால் என்னைப் போன்ற சட்டமன்ற உறுப்பினர்கள் நிச்சயமாகத் தலையிட மாட்டார்கள்'' என்று உறுதியாகச் சொல்கிறார் ஜெயக்குமார். பின் யார்தான் தலையிடுகிறார்கள்?

சந்திப்பு : ஸ்ரீநிவாசன்
படங்கள் : ராஜன்



கல்கி

# அமைச்சர் இந்திரகுமாரியின்

## அதிமேதாவித்தனம்!

திடுதிப்பென்று அமைச்சர் இந்திரகுமாரி நிறையப் பேச ஆரம்பித்து விட்டார். அவர் வெளியிட்டுள்ள அதிமேதாவித்தனமான இரண்டு கருத்துக்களில் முதலாவது, "வேண்டாத பெண் சிசுக்களை அரசே வளர்க்கும்" என்பது. அதாவது, இன்று பெண் குழந்தைகள் என்றால் சில பெற்றோர்கள் பெரும் சுமையாகக் கருதி, பிறந்ததுமே அழித்து விடுகிறார்கள். அப்படிச் செய்யாமல், 'பெண் குழந்தைகள் பிறந்ததும் அரசிடம் தந்து விடுங்கள்; அரசே வளர்க்கும்' என்று அபயம் அளிக்கிறார்.

பெண் குழந்தை பிறந்ததும் (ஏன் கருவிலேயே பெண் என்று கண்டு பிடித்தும் கூட) அதை அழிப்பது என்ற கொடுமை இன்று நிகழ்ந்தான் செய்கிறது. ஆனால் இந்த அரக்கத்தனங்கள் ஒழிய இந்திரகுமாரியின் யோசனை தக்க பரிகாரமாகாது. பெண் குழந்தைகளையோ கருவையோ யாரும் அழிக்கக் கூடாது எனில், மக்களின் வாழ்க்கைத் தரம் உயர வேண்டும். நல்ல கல்வியை அவர்களுக்கு வழங்க வேண்டும். பெண்கள் பாரமல்ல; ஆண் மகனுக்கு இணையாகப் பெண்களாலும் குடும்பத்துக்கு உதவ முடியும் என்ற நம்பிக்கையையும் நல்லறிவையும் ஊட்ட வேண்டும். பெண் குழந்தைகளின் கல்வியில் - குறிப்பாகத் தொழில் கல்வியில் - சிறப்புக் கவனம் செலுத்த வேண்டும். ஆணோ பெண்ணோ, ஓரிரு குழந்தைகளுக்குப் பிறகு குடும்பக் கட்டுப்பாட்டை மேற்கொள்ளுமாறு வற்புறுத்த வேண்டும். வரதட்சிணைத் தடைச் சட்டத்தைத் தீவிரமாக அமுல்படுத்தி, தண்டனையைக் கடுமையாக்க வேண்டும். ஆணா, பெண்ணா என்று கருச் சோதனை செய்வதற்கு மட்டுமின்றி, கருக் கலைப்புக்கும் தடைவிதித்துச் சட்டம் இயற்ற வேண்டும். பிரசாரமும் அவசியம்.

இதை விடுத்து, "பெண் குழந்தை பிறந்தால் அரசே வளர்க்கும்" என்றால், பெற்றோருக்குப் பொறுப்பில்லாமல் போய் விடும். பெண் குழந்தைகள் பிறக்கப் பிறக்க, அரசுப் பொறுப்பில் விட்டு விட்டு, மறுபடி மறுபடி கருவுறுவார்கள். அப்புறம் அரசு தமுக்கடிக்கும் குடும்பநலத் திட்டம் என்பதே அர்த்தமற்றதாகி விடும். இதை விடவும் கேவலம், அரசாங்கமே அநாதைப் பெண் குழந்தைகள் உருவாக வழிவகுப்பதுதான். அரசு வளர்க்கும் குழந்தை அனாதைக் குழந்தையாகத்தான் கருதப்படும். பெண்களில் மட்டும் இப்படி அநாதைக் குழந்தைகள் அதிகரிக்க வழிவகுப்பதை விட, பெண் இனத்துக்கு இழைக்கப்படும் பெரிய அநீதி வேறு என்ன இருக்க முடியும்? அரசு வளர்க்கும் அநாதைக் குழந்தைகள் அன்புக்கு ஏங்கி, மனவளத்திலும், அறிவாற்றலிலும் பிற குழந்தைகளை விடப் பின் தங்கித்தான் இருப்பார்கள். இவர்களிடம் உருவாகக்கூடிய தாழ்வு மனப்பான்மையை நீக்குவது மிகவும் கஷ்டம். திருமணமாவது அதை விடக் கஷ்டம். இந்தப் பரிதாபங்களையெல்லாம் யோசியாமல், ஏதோ அரைவேக்காடு திட்டம் போடுகிறார்கள்.

இந்திரகுமாரி வெளியிட்டுள்ள மற்றொரு மேதாவித்தனமான யோசனை, பள்ளிக் குழந்தைகளுக்கு மதிய உணவு தவிர காலை உணவும் தரப்பட வேண்டும் என்பது. இது அமுல்படுத்தப்பட்டால் 'இரவு உணவை மட்டும் மிச்சம் வைப்பானேன்; அதையும் பள்ளி விட்டுச் செல்லும் போது குழந்தைகளிடம் கொடுத்து அனுப்பி விடலாமே?' என்ற கோரிக்கை பிறந்தால் அதிசயப்படுவதற்கில்லை. பெற்றோருக்குக் குழந்தைகள்பால் பொறுப்பும் இராது, பாசமும் விட்டுப் போகும். குடும்பப் பொறுப்பு, பாசம் இவற்றை வேரறுக்கும் இந்தத் திட்டம் கண்டனத்துக்குரியது. இதற்கு ஆகக் கூடிய செலவு மலைக்க வைப்பது என்பது ஒருபுறமிருக்க, மதிய உணவுத் திட்ட ஊழியர்கள் கூடுதல் வேலைக்குக் கூடுதல் சம்பளம் கேட்பார்கள்.

மதிய உணவுத் திட்டம் என்பதே பொருளாதார நோக்கிலும் சரி, குடும்பப்பற்றை வளர்க்கும் நோக்கிலும் சரி, நன்மான நோக்கிலும் சரி முறையற்றது. ஆயினும், மனிதாபிமான நோக்கிலும் ஏழைக் குழந்தைகள் வேலைக்குச் சென்று விடாமல் பள்ளிக்கு வந்து கல்வி பெறச் செய்ய ஒரு வழி என்ற முறையிலும் ஆரோக்கியம் தரும் ஒருவேளை சத்துணவை ஏற்கலாம். இதற்கும் அதிகமாகச் செய்வது வீண் செலவு என்ற வகையில் சேரும். மக்களின் வரிப்பணம் முதல்வரின் பிரபலயை வளர்த்துக் கொள்ள விரயமாக்கப்படுவதாகத்தான் அர்த்தமாகும். மேலும் மேலும் வரிவிதித்து மக்களை வதைப்பதில்தான் முடியும்.

1992
நவம்பர் 1
மலர் : 51
இதழ் : 14
ஆங்கீரச
ஐப்பசி 16



தமிழ்த்திரு
நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி
பாப்பா. - பாரதியார்.

ரங்கனாதன் தெரு :

# ஒரு தொடர் போராட்டம்!

**செ**ன்னையிலேயே இன்று பிஸியான இடம் மட்டுமல்ல; ஏக மதிப்புள்ள இடமும் ரங்கனாதன் தெருதான். தெருவில் ஒன்பது சதுர அடியில் கடை வைத்திருப்பவர் இன்னொருவரிடம் கடையை ஒப்படைத்தால் கைமாறும் பகடி 80,000 ரூபாய். பத்துக்குப் பத்து பக்கா கடையோ சுமார் இருபது லட்சம். நம்ப முடிகிறதா? ''உண்மைதான் ஸார்'' என்கிறார் ரங்கனாதன் தெரு வியாபாரிகள் சங்கத் தலைவரான பி. எஸ். ரத்தினம்.

அறுபத்திரண்டு வருடங்களுக்கு முன் இன்ஜினீயர் ரங்கனாத அய்யங்கார் லே-அவுட் போட்டதுதான் ரங்கனாதன் தெரு. தெருவின் இரண்டு புறமும், வீடுகளுக்குப் பின்னால் துப்புரவுத் தொழிலாளர்கள் வந்து போகச் சந்துகள் வைத்துப் போடப்பட்ட லே-அவுட் இது. இன்று ஒரு பக்கச் சந்தில் அன்னை சத்தியா மார்க்கெட் போடப்பட்டு பர்மா பஜார் மாதிரி அயல்நாட்டு(?)ப் பொருள்கள் அட்டகாசமாக விற்கப்படுகின்றன.

தெருவை அடைத்த கடைகள் மாத்திரம் நெரிசலுக்குக் காரணமல்ல; பஸ் சந்திப்பும் ரயில்வே ஸ்டேஷனும் ரொம்ப நெருக்கமாக அமைந்திருப்பதும், புறநகர்களுக்குச் செல்லும் மக்கள் பஸ்ஸிலிருந்து ஸ்டேஷன் செல்ல ரங்கநாதன் தெருவைப் பயன்படுத்துவதும்தான் இங்கே நெரிசலுக்குக் காரணம்.

● ரத்னம்



"**இ**ன்று ரங்கனாதன் தெருவில் கடை வைத்திருக்கும் நடைபாதை வியாபாரிகளால் எங்கள் வியாபாரம் படுத்துப் போய் விட்டது. காய்கறிகளைத் தவிர்த்து விட்டுப் பார்த்தால் பிளாஸ்டிக் பொருள்கள், ஆடைகள், பாத்திரங்கள், கவரிங் நகைகள் என்று நாங்கள் விற்பனை செய்யும் எல்லாப் பொருள்களையும் அவர்களும் விற்கிறார்கள். போதாததற்குக் கடைக்கு வரும் வழியை மறித்துக் கொள்கிறார்கள். இவர்கள் கடை போடுவதால், பாதசாரிகள் போக்குவரத்துத் தடைப்படுவதில்லாமல் பிக்பாக்கெட், சங்கிலிப் பறிப்பு போன்றவையும் அதிகமாகி விட்டன!'' என்கிறார் ரத்னம்.

நடைபாதையில் கடைகள் போடக் கூடாது என்று ரங்கனாதன் தெரு வியாபாரிகள் சங்கம் சுப்ரீம் கோர்ட் வரை சென்று உத்தரவு பெற்று வந்து விட்டது. ஆனால் கோர்ட் உத்தரவை அமுல்படுத்த வேண்டிய கார்ப்பரேஷனும், காவல் துறையும் கையைப் பிசைந்து கொண்டு நிற்கின்றன. காரணம், அரசியல்; கைமாறும் ஏராளப் பணம்! இந்த நிலையில் வியாபாரிகள் கடை அடைப்பெல்லாம் செய்து பார்த்து என்ன பயன்? ஒன்றும் நடக்கவில்லை.



● ரங்கநாதன் தெரு

''நாங்கள் என்ன சொல்கிறோம் என்றால், மற்றொரு பக்கம் உள்ள சந்தை நடைபாதை வியாபாரிகளுக்கென்றே ஒதுக்கி விடுங்கள். அவர்கள் அங்கே கடை வைத்துக் கொள்ளட்டும். ஆனால், அரசு இந்த யோசனையைக் கண்டு கொள்ள மாட்டேன் என்கிறது. இவர்களால் எங்களுக்கு ஏகத் தொல்லைகள். இங்குள்ள வியாபாரிகள் சரக்கு எடுத்து வரும் வாகனங்கள் தெருவின் உள்ளே வர முடியவில்லை. உஸ்மான் சாலையிலிருந்து தலைச் சுமையாகவே எடுத்து வர வேண்டும். அழுகிப் போன காய்கறிகளைச் சாக்கடைகளில் போடுவதால் கழிவுநீர் செல்வதில் பிரச்னை. 27 அடி அகலச் சாலையை, இரு பக்கமும் சேர்த்து 15 அடி இவர்கள் மடக்கி விடுகிறார்கள்'' என்கிறார் ரத்னம்.

ஆனால் நடைபாதை வியாபாரிகளின் தர்க்கமோ வேறுவிதமாக இருக்கிறது. ''ஆக்ரமிப்புன்னா என்ன ஸார்?'' என்று கேட்கிறார் இருபது வருடமாக பிளாட்பார கடை வைத்துள்ள சண்முகம். ''இங்குள்ள கடைக்காரர்கள் ஒவ்வொருவரும், முன்பின் பக்கங்களில் இரண்டடி, மூன்றடி என்று சாலையை ஆக்ர மித்து பக்காவாகக் கடை கட்டியிருக்கிறார்கள். அதைப் பற்றி யாரும் மூச்சு விடுவதில்லை. நாங்கள் ஏழை, பாழைகள் வயிற்றுப்பாட்டுக்கு நடைபாதையில் வியாபாரம் செய்து கொண்டிருக்கிறோம். எங்கள் பிழைப்பில் மண் போடப் பார்க்கிறார்கள்!'' என்கிறார் சண்முகம்.

ஆக, முடிவுதான் எப்போது?

- ப்ரியன்

படங்கள் : பாலாஜி

## திருச்சி - ஸ்ரீரங்கம் நகர வாசகர்களே...

உங்கள் நகரப் பிரச்னைகள், சாதனையாளர்கள் பற்றிய கடிதங்கள் கல்கி அலுவலகத்திற்கு வந்துசேர வேண்டிய கடைசித் தேதி : 5.11.92.

மேலும் கல்கி ஆசிரியரையும் ஆசிரியர் குழுவினரையும் திருச்சி பஸ் நிலையம் அருகிலுள்ள ஹோட்டல் அஜந்தாவில் 7.11.92 அன்று காலை ஒன்பது மணி முதல் மாலை நான்கு மணிவரை நேரில் சந்தித்துப் பேசலாம்.

- ஆசிரியர்

**ஆலந்தூர் தொகுதி**
**அண்ணாமலை!**

# சுரங்கப் பாதைக்காகச் சுற்றி அலைகிறார்!

"நான் எனக்காக அலையவில்லை. பழவந்தாங்கல் சுரங்கப் பாதைப் பணிகள் விரைவில் முடிய வேண்டுமென்றுதான், கலெக்டர் ஆபீஸ், தாசில்தார் ஆபீஸ், கோட்டை என்று அலைந்து கொண்டிருக்கிறேன். நானே நேரிடையாகப் போனாலும் காரியம் மெதுவாகத்தான் நடக்கிறது!'' என்று சொல்லுகிறார் ஆலந்தூர் தொகுதி சட்டமன்ற உறுப்பினர் அண்ணாமலை.

நெற்றியில் அகலவாக்கில் பட்டையாகச் சந்தனம், நடுவில் குங்குமம். 1967ல் திருப்பத்தூரில் (வ.ஆ.) இருந்து சென்னைக்கு வந்து கட்டடத் தொழிலாளியாக வாழ்க்கையைத் துவங்கியவர் அண்ணாமலை. அப்புறம் மேஸ்திரி, காண்ட்ராக்டர் என்று உயர்ந்து இன்று எம்.எல்.ஏ. "கடவுள் புண்ணியத்தில் இன்னிக்கு எனக்கு எந்தக் குறையும் இல்லை. என் பதவிக் காலத்தில் தொகுதியில் இரண்டு சுரங்கப் பாதைகளையும் கட்டி விட வேண்டுமென்ற முயற்சியில் தீவிரமாக இறங்கியுள்ளேன்'' என்று சொல்கிறார் அண்ணாமலை.



● அண்ணாமலை

"பழவந்தாங்கல் சுரங்கப் பாதையைப் பொறுத்தமட்டில், அரசு விதிகளின்படி நடக்கவில்லை. முறைப்படி மூன்று நோட்டீஸ்கள் கொடுத்து இடத்தை ஆர்ஜிதம் செய்ய வேண்டும். முதல் நோட்டீஸ் கொடுத்து குறிப்பிட்ட காலம் கழித்து அடுத்தது கொடுக்க வேண்டும். ஆனால் அரசு அதிகாரிகள் கொஞ்சம் தூங்கி விட்டார்கள். அதற்குள் பாதிக்கப்பட்டவர்கள் கோர்ட், கேஸ் என்று போக விவகாரம் நீண்டு கொண்டே போகிறது. இப்போது மீண்டும் முறைப்படி எல்லாம் செய்யலாம் என்று ஆரம்பத்திருக்கிறோம். அதற்குள் ஏகப்பட்ட குழப்பம். இதற்கிடையில் ரயில்வே தனது பணியை முடித்து நெடு நாளாகிறது. எப்படியும் அதிகாரிகளின் ஆதரவில் தடைகளை அகற்றிக் காரியத்தை முடிப்பேன் என்பதில் சந்தேகமில்லை!'' என்கிறார் அண்ணாமலை.

பழவந்தாங்கல் அனுபவத்தின் அடிப்படையில், பரங்கிமலை சுரங்கப் பாதையைப் பொறுத்தமட்டில், "நீங்கள் இணைப்புப் பாதையை முடியுங்கள். பின்னர் நாங்கள் எங்கள் பகுதிக்குள் செய்து முடிக்கிறோம்'' என்று மாநில அரசிடம் ரயில்வே சொல்லி விட்டதாம். ஆனால், சம்பந்தப்பட்டவர்கள் இடத்தைக் கொடுக்காமல் கோர்ட்டில் தடை வாங்கி விட்டதால் மாநில அரசு இங்கும் போராடிக் கொண்டிருக்கிறது. "இது போதாதென்று எதிர்க் கட்சிக்காரர்கள் வேறு இடத்தைக் கொடுக்க வேண்டியவர்களுடன் சேர்ந்து கொண்டு சதி செய்கிறார்கள். காரணம் சுரங்கப் பாதை கட்டினால் எனக்கு நல்ல பெயர் வந்து விடும் என்பதுதான்!'' என்கிறார், அண்ணாமலை.

ஆலந்தூர், பல்லாவரம், ஆதம்பாக்கம் மக்களுக்குப் பாலாற்றுத் தண்ணீர் விடப்படுகிறது. ஆனால் இரண்டு நாட்களுக்கு ஒருமுறை, மூன்று நாட்களுக்கு ஒருமுறை என்று விடுகிறார்கள். மேலும் எப்போது விடுகிறார்கள் என்றும் தெரிவதில்லை...!

"அந்தப் பகுதிக்குக் குடிக்க, குளிக்க, துவைக்கத் தேவை 96 லட்சம் லிட்டர் தண்ணீர். ஆனால் விடுவதோ 54 லட்சம் லிட்டர்தான். இரண்டு நாட்களுக்கொரு முறை வந்தாக் கூட குடிதண்ணீர் வரை பிரச்னை இல்லை. ஆனால் சிக்கல் என்னவென்றால் பாலாற்றுத் தண்ணீர்க் குழாய்கள் 20 வருடங்களுக்கு முன்னர் போடப்பட்டவை. அதனால் தண்ணீர் அழுத்தம் தாங்க முடியாமல் பல சமயங்களில் குழாய்களில் வெடிப்பு ஏற்பட்டுத் தண்ணீர் விடும் பணி தடைப்படுகிறது. போதாததற்கு மின்தடை அடிக்கடி ஏற்படுவதால் நீரேற்று நிலையத்தில் பணி பாதிப்பு. பழைய குழாய்களை மாற்றி, ஜெனரேட்டர் வாங்கலாம் என்றால் பல்லாவரம், ஆலந்தூர் நக

ராட்சிகளில் நிதிவசதி கிடையாது. வருமானத்தில் 80 சதம் சம்பளத்திற்கே சரியாகி விடுகிறது'' என்கிறார் அண்ணாமலை.

நகரங்களில் குடியிருந்த பெரும்பாலான நடுத்தர மக்கள் சொந்த வீடு கட்டிக் கொண்டு குடியேறி இருப்பது இவர் தொகுதியில்தான். 62 குடியிருப்புச் சங்கங்கள் இருக்கின்றன. அதன் தலைவர்களுடன், ஒவ்வொரு மாதமும் இரண்டாவது சனிக்கிழமை சந்திப்பு நடக்கிறது. பிரச்னைகளுக்குத் தீர்வு காணும் வழிகள் விவாதிக்கப்படுகின்றன.

''உங்கள் தொகுதியில் ஏகப்பட்ட அடுக்கு மாடி வீடுகள் கட்டப்பட்டு வருகின்றன. பாதாளச் சாக்கடை இல்லாததால், செப்டிக் டாங்க்தான் கட்ட வேண்டியிருக்கிறது. ஆனால், அந்த டாங்கில் இருந்து தண்ணீர் கசிந்து தெருவெல்லாம் வழிந்தோடுகிறது. இந்த நிலையில் நிலத்தடி நீர் கெட்டுப் போக வாய்ப்பிருக்கிறது. அதனால் அடுக்கு மாடிக் கட்டடங்களுக்குத் தடைவிதித்தால் என்ன?''

''நிலத்தடி நீர் கெட்டுப் போய் விட்டது. நான் தனிப்பட்ட முறையிலும், நகராட்சி மூலமும், எம்.எம்.டி.ஏ.வுக்கு, 'இனி அடுக்கு மாடிக் கட்டடங்கள் கட்ட அனுமதி கொடுக்கக் கூடாது' என்று கடிதங்கள் எழுதியிருக்கிறேன். இதுவரை அனுமதி கொடுத்தவைதாம் கட்டப்பட்டு வருகின்றன. இனி புதிய அனுமதி இருக்காது. ஆனால் ஒரு நிரந்தரத் தீர்வாக பாதாளச் சாக்கடையும், மழைநீர் வடிகால்களும் கட்டலாம் என்று பார்த்தால் நிதி நெருக்கடி பயமுறுத்துகிறது. உலக வங்கியில் இந்தத் திட்டத்துக்கு நிதி கொடுக்க ஒப்புக் கொண்டாலும் 'திருப்பிக் கொடுக்கப் போவது எப்படி?'' என்று கேட்கிறார்கள். அதனால் எங்கள் பகுதியிலுள்ள குடியிருப்புச் சங்கத் தலைவர்களிடம், வீட்டுக்கு வீடு வசூல் செய்யச் சொல்லலாம் என்றிருக்கிறேன். அந்தப் பகுதி மக்களின் பங்காக ஒரு தொகையைக் கொடுத்தால் அரசும் உதவிக்கு வரும் என்ற நம்பிக்கை இருக்கிறது!'' என்கிறார் அண்ணாமலை.

தொகுதியிலிருந்து தள்ளி (அண்ணா நகர் மேற்கு) வசிக்கிறார் இவர். அதனால் மக்கள் இவரைச் சந்திக்க வரச் சிரமமாக இருக்குமே என்ற போது, ''கே. கே. நகரில் அலுவலகம் வைத்துள்ளேன். மேலும் என்னைப் பார்க்க வருகிறவர்கள் நான் இருக்கும் நேரத்தைத் தெரிந்து கொண்டு ஒரு முறை வந்தால் போதும்; காரியம் முடிந்து விடும். அடிக்கடி வர வேண்டிய அவசியம் இருக்காது. அதோடு நானும் தினம் தொகுதியைச் சுற்றி வந்து கொண்டுதான் இருக்கிறேன்!'' என்கிறார்.

சந்திப்பு : ப்ரியன்



# தென் சென்னை: சில பகற்கனவுகள்!

★ "டிஸ்னிலாண்ட் உருவாக்கப் போகிறோம்; உங்க பாடு யோகம்தான்" என்கிறார் ஓர் அமைச்சர்.

★ "சாலை மேல் சாலை போட்டு பஸ் ஓட்டப் போகிறோம்; இந்த 'பஸ்வே' பாரீஸ் கார்னரிலிருந்து கத்திப்பாரா சந்திப்பு வரை நீளும்" என்று பகற்கனவு காணச் சொல்கிறார் இன்னொரு அமைச்சர்.

★ "நகரை அழகுபடுத்தப் போகிறோம்; அதற்குக் கோடிக்கணக்கில் செல வழிக்கப் போகிறோம்" என்கிறார் முதல்வர்.

★ "தரமணியில் திரைப்பட நகரத்துக்கு அடிக்கல் நாட்டி விட்டேன்" என்கிறார் ஜெ. ஏற்கெனவே உபேந்திரா தலைமையில் கலைஞர் ஆட்சியில் அடிக்கல் நாட்டப் பட்ட திட்டம்தான் இது என்பதை வசதியாக மறைத்து!

★ "நேரு ஸ்டேடியத்தை இடித்துக் கட்டுகிறேன்" என்கிறார். சர்வதேச தரத்தில் ஆட்டத்துக்கு ஏற்றபடி மைதானம் தயாரா வதுதான் முக்கியம்; ஸ்டேடியம் அல்ல என்பதை மறந்து விடுகிறார்.

இப்படி நாள் ஒரு பகற்கனவும் பொழுதொரு திட்டமுமாக அரசு அறிவிக்க, அறிவிக்கப் பொது மக்கள், 'பகீர், பகீர்' என்று உணர்கிறார்கள்! 'இதற்கெல்லாம் எத்தனை கோடி நம் வரிப்பணம் வீணாகப் போகிறதோ, எத்தனை கோடி அதிகாரத்தில் உள்ளவர்களால் விழுங்கப்படப் போகிறதோ' என்றுதான்.

திட்டங்களை அறிவிப்பது சுலபம்; நிறைவேற்றுவது கஷ்டம் என்பது ஏற்கெனவே நேரு ஸ்டேடியம் தயாராகாததால் சர்வதேச ஃபுட்பால் பந்தயங்களும் ஒத்திப் போடப்படுவதிலிருந்து உணரலாம். இதனால் அனைத்துலக அளவில் எத்தனை விளையாட்டு வீரர்களுக்கு எவ்வளவு சங்கடங்களோ!

மயிலாப்பூர் பகுதி மக்களும் ரயில் வசதி பெற வேண்டும் என்ற நோக்கில் பீச் - லஸ் அதிவேக ரயில் திட்டம் போடப்பட்டது. இதைத் திருவான்மியூர் வரை கொண்டு போகும் இரண்டாவது பகுதித் திட்டமும் உண்டு. '1991ல் பீச் - சேப்பாக்கம் பகுதியிலாவது ரயில் ஓடும்' என்றார்கள். ஒன்றும் நடக்கவில்லை. தூண்கள் நிற்கின்றன, அவ்வளவுதான். இப்போது முழுத் திட்டம் நிறைவேற இன்னும் மூன்று ஆண்டுகள் என்கிறார்கள். எந்தனை மூன்று ஆண்டுகள் என்று கூறவில்லை!

இந்தத் திட்டப்படி ரயில் பயணம் செல்லும் மக்கள் நல்ல மணத்தை நுகர்ந்த படி செல்வார்கள். காரணம், வேக ரயில் பாதையின் பெரும் பகுதி பக்கிங்ஹாம் கால்வாயின் மீதே செல்லும். இதுவும் கூவமும்தானே சென்னையின் இரு நோய்ப் பெருக்கு நிலையங்கள். இவை தூய்மை அடைந்து விட்டால் டாக்டர்கள் கதி என்னாவது?

விமான நிலையத்திலிருந்து சென்னை வர, மாற்றுப் பாதையாகப் பல்லாவரம், கிழ்க்கட்டளை வழியாகச் சைதாப்பேட்டைக்கு ஒரு சாலை போடும் திட்டமும் இருக்கிறதாம்.

ஜப்பானில் இரவோடு இரவாக மின்விளக்கொளியில் நெடுஞ்சாலையில் ரெடிமேட் தூண்களை நட்டு, பாதைக்கு மேல் பாலப் பாதை உருவாக்குகிறார்கள். பகலில் போக்குவரத்து பாதிக்கப்படுவ தில்லை. இரவு எட்டு மணி நேரம் வேலை செய்து குறித்த காலக் கெடுவில் காரியத்தை முடிக்கிறார்கள். பட்ஜெட்டுக்கு மேல் ஒரு 'பென்' கூடச் செலவாகாது.

அது ஜப்பான் கலாசாரம். இங்கே வளர்வது ஜம்பக் கலாசாரம்!

- கௌசல்யா

# T. S. S. NIDHI LTD

ESTD 1973

THIRUMYLAI SASWATHA SAHAYA NIDHI LIMITED

Regd. Office: 230, R. K. Mutt Road, Mylapore, Madras 600 004. Phone: 77503.

THIRUVANMIYUR BRANCH : 112, Thiruvalluvar Salai, Kamraj Nagar, Madras 600 041.

## DEPOSIT SCHEMES

### FIXED DEPOSIT SCHEME

(Minimum of Rs. 1000/- and in Multiples of Rs. 500/-)

| Period (months) | Rate of Interest P.A. | CASH INCENTIVE |
|---|---|---|
| 6 | 15 % | not applicable |
| 12 | 17 % | 1/2 % |
| 24 | 18 % | 1 % |
| 36 | 19 % | 1 1/2 % |
| 60 | 20 % | 2 % |

### KARPAGA VIRUTCHAM DEPOSIT SCHEME

(Re-Investment Plan)

(Minimum of Rs. 1000/- and in Multiples of Rs. 500/-)

| DEPOSIT AMOUNT RS. | PERIOD (Months) | MATURITY VALUE RS. | CASH INCENTIVE |
|---|---|---|---|
| 1000 | 12 | 1180 | 1/2 % |
| 1000 | 24 | 1425 | 1 % |
| 1000 | 36 | 1760 | 1 % |
| 1000 | 45 | 2025 | 1 1/2 % |
| 1000 | 67 | 3025 | 2 % |

### HIGHLIGHTS:

- Recognised as a **NIDHI COMPANY** by Central Government of India.
- Company is in 20th year of Service.
- Monthly interest warrants for the financial year would be despatched in advance at the beginning of the year for fixed deposits.
- No tax deduction at source if the fixed deposit holders submits 15 H incase. For any financial year interest exceeds Rs. 2500/-.
- Loan facility upto 75 % on Fixed Deposit and 85 % on Recurring Deposit paid-up amount.
- Pre-mature repayment facility as per terms and conditions.
- Your Deposit amount is advanced against Gold Jewels and immovable properties of Madras city limits.
- Transaction with members only. (Rupees Two only for Membership.)

### JEWEL LOAN

Jewel loans granted on Gold ornaments at Rs. 255/- per gram i.e. Rs. 2040/- per sovereign (8 gm).

Recurring Deposit not required.

## SENIOR CITIZEN DEPOSIT SCHEME 19 % p.a.

(APPLICABLE FOR AGED PERSONS ABOVE 55 YEARS, PENSIONERS, HANDICAPPED, WIDOWS, EDUCATIONAL AND CHARITABLE ORGANISATIONS.)

**Minimum Deposit Rs. 10000/-** **Period - 12 months.**

### RECURRING DEPOSIT SCHEME

(Minimum of Rs. 10/- and in Multiples of Rs. 10/-)

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| MONTHLY DEPOSIT | 100 | 100 | 100 | 100 | 100 | 100 |
| PERIOD (Months) | 12 | 24 | 36 | 48 | 60 | 72 |
| MATURITY VALUE | 1310 | 2850 | 4650 | 6710 | 9050 | 11,580 |

### SAVINGS DEPOSIT SCHEME 9%

| | BUSINESS HOURS | | WEEKLY HOLIDAY |
|---|---|---|---|
| | WEEK DAYS | SUNDAYS | |
| HEAD OFFICE Mylapore | 9 am - 12.30pm<br>2.30 pm - 5 pm | 9 am to 12.30pm<br>- | FRIDAY |
| BRANCH OFFICE Thiruvanmiyur | 9 am - 12.30pm<br>2.30 pm - 5 pm | 9 am to 12.30pm<br>- | TUESDAY |

**P. S. SAMBASIVAM**
Secretary

# சக்கரவர்த்தித் திருமகன்

## 2. சந்தத்தைக் கண்டார்!



ஒரு நாள் காலை வால்மீகி ரிஷியின் ஆசிரமத்துக்கு நாரத முனிவர் வந்தார். வால்மீகி ரிஷி அவரை உபசரித்து வணங்கி, ''சகலமும் தெரிந்த நாரதரே, இந்த உலகத்தில் வீரர்களுக்குள் எல்லா நற்குணங்களும் அறிவும் பெற்ற உத்தம புருஷன் யார்?'' என்று கேட்டார்.

ஞான திருஷ்டியால் நாரதர், எதற்காக வால்மீகி ரிஷி இதைக் கேட்கிறார் என்று தெரிந்து கொண்டு, ''சூரிய வம்சத்தில் பிறந்த ராமன் அயோத்தியில் அரசு புரிந்து வருகிறான். நீர் கேட்கும் உத்தம வீரன் அவன்தான்'' என்றார்.

இப்படிச் சொல்லி விட்டு ராம சரித்திரத்தைச் சுருக்கமாக விளக்கிச் சொன்னார். அதைக் கேட்ட வால்மீகி ரிஷி மிகவும் மகிழ்ச்சியடைந்தார். நாரதர் விடை பெற்றுச் சென்ற பிறகும் அதைப் பற்றியே தியானித்துக் கொண்டிருந்தார். பிறகு நதிக்கரைக்குப் போனார்.

குளிப்பதற்காக முனிவர் இடம் பார்த்துக் கொண்டு ஆற்றங்கரையில் உலாவிக் கொண்டிருந்த அந்தச் சமயம், மரக் கிளையில் ஆணும் பெண்ணுமாக விளையாடிக் கொண்டிருந்த இரண்டு கிரௌஞ்ச பட்சிகளுள் ஒன்று எங்கேயோ நின்ற ஒரு வேடன் எய்திய அம்பு பட்டுக் கீழே விழுந்தது. பெண் பறவை, தன் காதலன் திடீர் என்று அடி பட்டுக் கீழே விழுந்து புரள்வதைப் பார்த்துக் கதறிக் கதறி அழுதது.

இந்த நிகழ்ச்சியைக் கண்ட ரிஷி, ''அடே பாபி! இப்படிச் செய்தாயே! நீ



எவ்வளவு நாள் வாழ்ந்தாலும் இருக்க இடமின்றி அலையக் கடவாய்'' என்று தன்னையுமறியாமல் வேடனைச் சபித்து விட்டார். அடுத்த கணம், இப்படி ஏன் செய்தேன் என்று நினைந்து நினைந்து வருத்தப் பட்டார். 'வேடனை நான் ஏன் சபித்தேன்? எனக்கென்ன உரிமை இதற்கு? கோபாவேசத்துக்கு இடம் தந்து விட்டேனே!' என்று துக்கப்பட்டார்.

ரிஷியின் வாயினின்று வெளிப்பட்ட சாப மொழிகள் ஓர் அற்புத நாதத்தோடும் சந்தத்தோடும் அவருடைய காதிலேயே தொனித்தன. அதைக் கண்டு ரிஷியானவர் வியப்பு அடைந்தார். பறவைகளின் துக்கத்தைக் கண்டு தம் உள்ளத்தில் உதித்த கருணையும் அடங்காத மனக் கலக்கமும் சாப உருவம் கொண்டு, தம்மையறியாமல் ஓர் அருமையான பாட்டாக அமைந்து விட்டதைக் கண்டு பேராச்சரியங் கொண்டார். இது எனக்கு விளங்காத ஆண்டவன் திருவிளையாடல் என்று எண்ணித் தியானத்தில் அமர்ந்தார்.



இந்நிலையில் சாட்சாத் நான்முகக் கடவுளே பிரத்யட்சமாக வந்து, ''ரிஷி சிரேஷ்டரே, திகைக்காதீர்! ராம சரித்திரத்தை எழுதும் முறை உமக்குக் காட்டவே இந்த நிகழ்ச்சி நடந்தது. சோகத்திலிருந்து தோன்றிய சுலோகத்தையே வைத்து ரகுநாதரின் கதையைப் பாடி உலகத்துக்கு உதவும் திறமை உமக்கு வரமாகத் தந்தேன்'' என்று சொல்லி மறைந்தார்.

அதன்மேல் வேடனைக் கோபித்துச் சொன்ன சாப மொழிகளைத் திரும்பத் திரும்ப ரிஷியும் சீடர்களுமாகப் பாடிப் பாடி அந்தச் செய்யுள்





''வெள்ள நிவாரணத்தைப் பார்வையிட வந்த அமைச்சர், எதுக்குப் பழங்கால ராஜா மாதிரி வில், அம்பு, வேல், வாள் முதலியவற்றோடு வந்திருக்கார்?''

''போர்க்கால அடிப்படையிலே நிவாரணம் நடக்குதுன்னு ஜனங்களுக்கு உணர்த்தறதுக்காம்!''

- ராஜி ராதா

உருவத்தை மனத்தில் அமைத்துக் கொண்டார்கள். பின்னர் அந்தச் சந்தத்தில் ரிஷியானவர் ராம சரித்திரத்தைப் பூரணமாகப் பாடித் தம்முடைய சீடர்களுக்குக் கற்பித்தார். இதுவே வால்மீகி ராமாயணம் என்னும் புண்ணிய நூலின் அற்புதத் தோற்றுவாய்.

**ம**க்களின் துக்கங்களை ஈசுவரனும் ஈசுவரியும் மானிட ஜாதியில் பிறந்து தாமே நேரில் அனுபவித்து, தருமத்தை உறுதிப்படுத்திவிட்டு மறைந்த இந்தப் புண்ணிய கதையை வால்மீகி மகரிஷி ஒப்பற்ற மதுரமான முறையில் பாடி உலகத்துக்குத் தந்தார். ''பூமியில் மலைகளும் ஆறுகளும் உள்ள வரையில் இந்த ராமாயணம் மக்களிடை வழங்கும், எல்லாப் பாபங்களினின்றும் விடுதலை தரும்'' என்று நான்முகன் ஆசீர்வதித்துச் சொன்னது பொய்யாகாது..

★ ★ ★

**கோ**சல தேசம் கங்கைக்கு வடக்கே சரயூ நதி பாய்ந்து செழிப்புற்ற விசாலமான தேசம். கோசல நாட்டின் தலை நகரம் அயோத்தியை. மனு என்னும் புகழ் பெற்ற சூரிய குல அரசனால் நிர்மாணிக்கப்பட்ட நகரம். மிக்க அழகும் புகழும் பெற்ற பெரிய நகரம். வால்மீகி வருணித்திருப்பதைப் படித்தால் தற்கால ராஜதானி நகரங்களுக்கு எந்த விதத்திலும் அயோத்தி குறைந்ததாகத் தோன்றவில்லை. அந்த நாட்களிலுங் கூட பாரத தேசத்தில் நகரங்களும் நகரப் பண்பாடும் மிக உன்னத நிலை அடைந்திருந்ததாகத் தெரிகிறது.

தசரத சக்கரவர்த்தி இந்த அயோத்தியா நகரத்திலிருந்து கொண்டு ராஜ்யத்தை ஆண்டு வந்தான். தசரதன் தேவர்களுக்காக யுத்தம் செய்தவன். மூன்று உலகங்களிலும் புகழ் பெற்ற அரசன். இந்திரன், குபேரன் இவர்களுக்குச் சமானமாக இருந்தான். கோசலநாட்டு ஜனங்களும் மிகச் சந்தோஷமாகவும் யோக்கியமாகவும் வாழ்ந்து வந்தார்கள். எண்ணிறந்த வீரர்களடங்கிய பெருஞ்சேனை ராஜ்யத்தை நன்றாகப் பாதுகாத்து வந்தது. சத்துருக்கள் கிட்ட நெருங்க முடியாத முறையில் தசரதன் அயோத்தி நகரத்தைப் பாதுகாத்து வந்தான். சேனாபலம், கோட்டை மதில் சுவர்கள், அகழிகள், எதிரிகளைத் தாக்கும் எந்திர அமைப்பு - இவைகளால் காக்கப்பட்ட அந்த நகரம் சத்துருக்களால் யுத்தம் செய்து பிடிக்க முடியாததாக இருந்தது. அந்த நகரத்துக்கு அயோத்யை ★ என்ற பெயர் மிகப் பொருத்தமாகவே இருந்தது.

தேவராஜனைப் போல் புகழும் ஐசுவரியமும் பெற்று அரசாண்டு வந்த தசரதனுக்கு மந்திரிகளும் சரியாக அமைந்திருந்தார்கள். அரசனுக்கு யோசனை சொல்வதிலும் இட்ட பணிகளை உடனே நிறைவேற்றுவதிலும் மிகுந்த சாமர்த்தியம் பெற்ற எட்டு மந்திரிகள் தசரதனுக்குச் சேவை செய்து வந்தார்கள். தர்மோபதேசம் செய்வதற்கும் பூஜை, வேள்விச் சடங்குகள் முதலிய காரியங்களை நடத்துவதற்கும், வசிஷ்டர் வாமதேவர் முதலிய ரிஷிகளும், வேறு சிறந்த பிராமணர்களும் அரசன் பக்கத்திலிருந்து வந்தார்கள்.

ஜனங்களைக் கஷ்டப்படுத்தாமல் சக்திக்குத் தகுந்தவாறு வரிகள் வசூலிக்கப்பட்டன. குற்றவாளிகளின் சக்தி, சூழ்நிலை இவற்றை உத்தேசித்து அபராதங்கள் விதிக்கப்பட்டன. ஆலோசனை சொல்லுவதில் நிபுணர்களும் ராஜ்ய காரியங்களில் சமர்த்தர்களுமான மந்திரிகளாலும் அதிகாரிகளாலும் சூழப்பட்டு ஆட்சி புரிந்த தசரதன் உதய சூரியன் கிரணங்கள் வீசி ஜொலிப்பது போல் ஜொலித்தான்.

★ 'அயோத்யா' என்றால் 'யுத்தத்தால் அடக்க முடியாத' என்று பொருள்.




# 3. குறை தீர்ந்தது!

ஆண்டுகள் பல நன்றாகக் கழிந்தன. ஆயினும் அரசனுக்கு ஒரு பெருங் குறை. புத்திர பாக்கியம் இல்லாத குறை. ஒருநாள் - அப்போது வசந்தருது - அரசனுக்கு ஓர் எண்ணம் தோன்றிற்று. "அசுவமேத யாகமும் புத்திர காமேஷ்டியும் செய்வித்தேனானால் ஒருவேளை மக்கட்பேறு பெறுவேனோ?" என்று எண்ணினான். குருக்களைக் கேட்டதில் அவர்களும் ரிஷ்ய சிருங்க முனிவரைத் தருவித்து அவர் தலைமையில் இந்த வேள்வியை நடத்தத் தீர்மானித்தார்கள். தீர்மானித்தபடி மகாராஜா உத்தர விட்டுச் சகல ஏற்பாடுகளும் செய்தார்கள். அரசர்களுக்கு அழைப்பு, யாக சாலை நிர்மாணத்துக்கு வேண்டிய காரியங்கள் எல்லாம் மிகத் தீவிரமாக நடைபெற்றன.

அந்தக் காலத்தில் வேள்வியென்றால் சாமான்யமல்ல.. யாக மேடைக்கு வேண்டிய அளவுகள் எடுத்து மிக ஜாக்கிரதையாகச் செய்ய வேண்டும். அதற்கே தனி நிபுணர்கள் உண்டு. அவர்கள் கலந்து நிச்சயித்து உத்தரவிட்டபடி வேலைக்காரர்களைக் கொண்டு எல்லாம் தயாரிக்க வேண்டும். யாக பாத்திரங்கள் செய்யும் நிபுணர்களைத் திரட்டி, அவர்களுக்கு இன்ன இன்னது செய்யுங்கள் என்று சொல்லி வேலை வாங்க வேண்டும். தச்சர்கள், சிற்பிகள், குளம் கிணறு வெட்டுகிறவர்கள், சித்திரக்காரர்கள், பாடகர்கள், வாத்திய சங்கீதக்காரர்கள், நிருத்தியக் கலைஞர்கள் - இன்னும் இம்மாதிரியான பல பேர்களைத் திரட்ட வேண்டும். விருந்தினர்கள் தங்குவதற்கு ஒரு புதிய நகரமே நிருமாணித்து ஆயிரக்கணக்கான ஜனங்களுக்குப் போஜனமளித்து, உபசரித்து, மாடுகள், துணிகள் முதலியன கொடுக்க வேண்டும். ஆட்டம், சங்கீதம், வேடிக்கை முதலியவைகளையும் ஏற்பாடு செய்து, பெருங் கூட்டத்தைத் திருப்தி செய்து அனுப்ப வேண்டும். தற்கால உலகில் ராஜாங்க ஆதரவில் நடத்தப்படும் மகா சம்மேளனங்களைப் போலவே அந்தக் காலத்தில் வேள்விகள் நடத்தப்பட்டன.

எல்லாக் காரியங்களும் சரியாகவும் மும்முரமாகவும் நடத்தப்பட்டு, யாகக் குதிரையும் அதனுடன் ஒரு வீரர் படையும் பல நாடுகள் சுற்றி வரும்படி அனுப்பப்பட்டது. ஒரு வருஷம் கழித்து எந்த இடையூறுமில்லாமல் யாகக் குதிரையும், குதிரையை அழைத்துச் சென்ற வீரர்களும் வெற்றிக் கொண்டாட்டத்துடன் நாட்டுக்குத் திரும்பி வந்தார்கள்.

அதன் மேல் யாகத்தைச் சாஸ்திரப்படி செய்ய ஆரம்பித்தார்கள். அயோத்தியையில் இது நடக்க, தேவர்களுக்குள் நடந்த யோசனையை வால்மீகி பின்வருமாறு சொல்லுகிறார்.

நான் முகக் கடவுளைப் பார்த்துத் தேவர்கள் சொன்னார்கள்: "பகவானே! உம்முடைய வரத்தைப் பெற்றுக் கொண்டு ராவணன் என்ற அரக்கன்

எங்களுக்கெல்லாம் மிகுந்த தொல்லை தந்து வருகிறான். அவனை நாம் அடக்கவோ, ஜெயிக்கவோ, கொல்லவோ முடியவில்லை. உம்முடைய வரத்தினால் அவனுக்குப் பாதுகாப்பு ஏற்பட்டு அவனுடைய அகங்காரம் அதிகரித்து, துஷ்டனாகப் போய், அவன் எல்லாரையும் அவமதித்தும் கொடுமை செய்தும் வருகிறான். இந்திரனைத் துரத்திவிட்டுத் தேவலோகத்தையே கைப்பற்ற எண்ணுகிறான். அவனைக் கண்டு சூரியனும் வாயுவும் வருணனுங் கூடப் பயப்பட்டு நடுங்குகிறார்கள். அவன் அகங்காரத்தை அடக்கி அவன் கொடுமையை முடிவுக்குக் கொண்டு வரும் யோசனை நீர்தான் சொல்ல வேண்டும்.''

இதைக் கேட்ட பிரம்மன், ''இந்த ராவணன் தவம் செய்து வரம் பெற்றிருக்கிறான். நல்ல வேளையாக வரம் கேட்கும் பொழுது, அவனே ஒரு விஷயத்தை விட்டு விட்டான். தேவ, கந்தருவ, ராக்ஷசர்களால் தனக்கு மரணம் உண்டாகக் கூடாது என்று வரம் பெற்றானேயொழிய மானிடர்களைப் பற்றிக் கேட்கவில்லை. மனித ஜாதியை மறந்தோ அலட்சியம் செய்தோ விட்டு விட்டான். ஆனபடியால் இதற்கு வழி உண்டு'' என்றான்.

எல்லாருக்கும் ஒரே மகிழ்ச்சி. உடனே மகா விஷ்ணுவைச் சரணடைந்தார்கள். ''லோகநாதனே, ராவணன் என்ற துஷ்டன் பிரம்மாவினிடம் வரம் பெற்று உலகத்தை இம்சை செய்து வருகிறான். அதைப் பொறுக்க முடியவில்லை. அவன் அமரத்வம் கேட்டுப் பெற்ற வரத்தில் மனிதனால் தனக்கு மரணமில்லை என்று சேர்க்கப்படவில்லை. மறந்தோ, அலட்சியம் செய்தோ அவன் அதைக் கேட்கவுமில்லை, பிரம்மனிடமிருந்து பெறவுமில்லை. ஆனபடியால் தங்களுடைய அருள் எங்களுக்கு வேண்டும். மனித ஜன்மம் எடுத்துத் தாங்கள்தான் எங்களைக் காப்பாற்ற வேண்டும்'' என்றார்கள்.

**நா**ராயணனும் அப்படியே என்று ஒப்புக் கொண்டு, ''பூவுலகில் புத்திர பாக்கியத்துக்காக யாகம் செய்யும் தசரதனுக்கு நான்கு குமாரர்களாக நான் அவதரித்து ராவணனைக் கொன்று உங்களுக்கு விடுதலையும் தருவேன்'' என்றான். அவ்வாறே தசரதனுடைய மூன்று மனைவிமார்களின் வயிற்றில் கர்ப்பவாசம் செய்யத் திருவுளங் கொண்டான்.

★ ★ ★

**ரி**ஷ்ய சிருங்கர் வேள்வித் தீயில் ஆகுதி விட்டார். நெய்யைத் தீ விழுங்கிற்று. தீயிலிருந்து பொங்கி எழுந்தது கொழுங்கனல் போன்ற ஒரு பெரிய உருவம். அதன் பிரகாசம் சூரியனைப் போல் கண்களைக் கூசிற்று.

இரு கைகளாலும் ஒரு திவ்விய தங்கப் பாத்திரத்தை ஏந்தி நின்றது. கம்பீரமான துந்துபி சுவரத்தில் சொல்லிற்று. "தசரத மகாராஜனே! உன்னுடைய பிரார்த்தனையை ஒப்புக்கொண்டு தேவர்கள் இந்தப் பாயசத்தை உன் மனைவி மார்களுக்கென்று அனுப்பியிருக்கிறார்கள். உனக்குப் புத்திர பாக்கியம் உண்டாகும். இதைப் பெற்றுக் கொண்டு உன் பத்தினிகளுக்குத் தருவாயாக. மங்களம்!" என்றது.

தசரதனும் அடங்கா மகிழ்ச்சியடைந்து குழந்தையைத் தூக்கியெடுப்பது போல் வெகு பிரியமாகத் தங்கப் பாத்திரத்தைப் பெற்றுக் கொண்டான். நெருப்பிலின்று கிளம்பிய யக்ஞ புருஷனும் மறைந்தான்.

வேள்வி முடிந்தபின் அரசன் பாயச பாத்திரத்தை அப்படியே எடுத்துக் கொண்டு அந்தப்புரம் சென்று தனது மனைவிமார்களிடம்,

"தேவர்களின் பிரசாதம் இதோ கொண்டு வந்திருக்கிறேன். இதை நீங்கள் மூவரும் அருந்திப் புத்திரப் பேறு அடையுங்கள்!" என்று சொன்னான்.

இந்த மகிழ்ச்சிச் செய்தியைக் கேட்டதுமே அந்தப்புரம் சரத் கால சந்திர காந்தியுடன் ஜொலித்தது. பாத்திரத்திலுள்ள பாயசத்தில் பாதி கௌசல்யா தேவி அருந்தினாள். மிகுதியில் ஒரு பாதியைச் சுமித்திரைக்கு அப்படியே தந்து அவள் அருந்தினாள். மிஞ்சிய பாயசத்தில் பாதியைக் கைகேயி அருந்தினாள். பின்னர் எஞ்சி நின்ற பாயசத்தைத் தசரதன் மறுபடி சுமித்திரைக்குக் கொடுத்தான்.

பரம ஏழை ஒருவன் பணம் நிறைந்த பானை ஒன்று புதைத்துக் கிடந்ததைத் திடீர் என்று அடைந்து பெற்ற மகிழ்ச்சியைப் போல் தசரதனுடைய மூன்று மனைவிகளும் மகிழ்ந்து மனம் பூரித்தார்கள். எதிர்பார்த்தபடி மூன்று ராஜ பத்தினிகளும் கர்ப்பம் தரித்தார்கள்.

(தொடரும்)



● 'நான் கூவுவதைக் கேட்பதற்காகவே சூரியன் உதிக்கிறான்' என்று சேவல் நினைக்குமானால், அது தான், அகந்தை.

- ஜார்ஜ் எலியட்

● மனிதன் உருவாக்கும் போலிப் பணத்தை விட, பணம் உருவாக்கும் போலி மனிதர்களே அதிகம்.

- சிட்னி ஹாரிஸ்

● நண்பனுக்காக உயிரைக் கொடுப்பது எளிது. ஆனால் உயிரைக் கொடுப்பதற்குரிய நண்பன் கிடைப்பது அரிது.

- கதே

- சௌ. குணா



"ரயில்வே வேலை எப்படி கிடைத்தது... சிபாரிசா?"

"இல்லை... 'இன்டர்வியூ'க்கு இரண்டு மணி 'லேட்'டாப் போனேன்...!"

- சி. நாச்சிமுத்து

சில வருடங்களுக்கு முன் குஜராத் மாநிலத்திலுள்ள கிராமங்களில், கூந்தலைக் கருமையாக்கும் 'ஹேர்-டை' எனப்படும் கருப்புச்சாயம் திடீரெனப் பலமடங்கு அதிகம் விற்பனை ஆயிற்று. அச்சாயத்தைத் தயாரித்த கம்பெனியினருக்கு மகிழ்ச்சி என்றாலும் திடுமென்று விற்பனை அதிகரித்த தன் காரணத்தை அறிய முடியாமல் திணறினர். கம்பெனியின் விளம்பர அதிகாரி அக்கிராமங்களுக்குச் சென்று விசாரித்தார். அவர் கண்டு பிடித்தது: சாயத்தை உபயோகித்தது மனிதர்களல்ல - ஆடுகள்! கறுகறுவெனப் பளபளக்கும் ஆடுகளுக்கு சந்தையில் விலை அதிகமாம்!

- வசந்தா சாரி

# 'அரங்க நாயகி'

சரவணன் ஒன்பது மணிக்கு வருவதாகச் சொல்லி இருந்தான். இது போன்று அவன் வீட்டுக்கு வருவது நான்காவது முறை. இதுவரையில் அவள் யாரையும் வீடு வரை அனுமதித்த தில்லை. எல்லா முகங்களையும் க்ரீன் ரூமோடு அனுப்பி விடுவாள். புதிய நாடகங்களுக்கு சபா புக் பண்ணுவதிலிருந்து இதர எல்லா வேலைகளையும் செய்வது ராகவன். ராகவன் தூரத்துச் சொந்தம். பண விஷயம் எதிலும் அவள் தலையிடுவ தில்லை. அவளுக்கு இந்த நாடகக் குழு போதும். அவளுடைய ஒரே லட்சியம் மேடையில் நடித்துக் கொண்டிருக்கும் பொழுதே இறந்து விட வேண்டும். கிழவியானாலும் சரி, ஒரு தடியை ஊன்றிக் கொண்டு வரும் பாத்திரத்தில் நடிக்க ஜனங்கள் முன்பு மேடை ஏற வேண்டும்.

''ராமய்யர்!''

தோள் துண்டு இடுப்புவரை தொங்க ஓடி வந்த ராமய்யர், ''சொல்லுங்கோம்மா'' என்றார்.

''ஒரு ஸ்வீட்டும், காரமும் பண்ணிடுங்கோ. அப்புறம் லைட்டா ஒரு டிஃபன்.''

''சரிம்மா'' - ராமய்யர் உள்ளே போய் விட்டார்.

சரவணனை முதலில் ஃபிலிம் சொஸைட்டி ஹாலில்தான் சந்தித்தாள். ஒரு சராசரி பணக்கார இளைஞனுக்கு உண்டான எல்லா அம்சங்களும் அவனுக்கும் இருந் தன. செழுமையான தேகம்; வசீகரிக்கும் சிரிப்பு; முன் யோசனையில்லாப் பேச்சு. இத்தனையையும் மீறி அவனிடம் வெளிப் பட்ட புத்திசாலித்தனம்தான், அவன் மீது ஓர் சர்ப்பை ஏற்படுத்தி வீடு வரை அனு மதிக்க இடமளித்திருக்க வேண்டும்.

''நான் சரவணன்.''

''நான் சாருலதா.''

'' என் தந்தையுடன் பிஸினஸ் செய் கிறேன்.''

''அம்பை க்ரியேஷன்ஸ் என்னும் பெயரில் நாடகக் குழு நடத்தி வருகிறேன்.''

''ஓ! அது நீங்கதானா?''

மிகப் பெரிய ரசனை உடையவன் அவன் என்று அவள் புரிந்து கொள்ள, பின் வந்த சந்தர்ப்பங்கள் உதவின. ஃபிலிம் ஸைவை, தரம் வாய்ந்தவை என இங்கிருக்கும் போராட்டம் உலகம் பூராவும் பொதுவாக உள்ள ஒன்று என்றான். நல்ல திரைப்படத் துக்கு அரங்கு கிடைக்காமல் ரோமிலும், பாரிஸிலும் படக்கருளைத் தூக்கிக் கொண்டு அலைந்த செக்கோஸ்லோவாக்ய இயக்கு னரைப் பற்றிச் சொன்னான்.

''தியேட்டர் ஸென்ஸே இல்லாத தமிழ் நாட்டில் எப்படி உங்களால் நாடகம் போட முடிகிறது?''

''நாடகம் சொல்வது என்னும் உணர்வு மகத்தானது. அந்த உணர்வு முழுவதிலும் நான் கரைந்து விடுகிறேன். அரங்கம் சரியில் லாமல் இருக்கலாம். சொல்லும் யுக்தி மரபு சார்ந்ததாக இருக்கலாம். என்னை வெளிப் படுத்த வேண்டும் என்னும் எண்ணத்தின் தூய்மைக்காகவும், அந்தத் தூய்மை ஏற்படுத் தும் பரவசத்திற்காகவும், இன்னும் ஒரு நூறு ஆண்டு நடிகையாக, நாடக இயக்குனராக நானிருப்பேன்.''

முதல் முறை அவளுடைய ஸ்கிரிப்ட்டை சரி செய்வதற்காக வந் திருந்தான். இது வரையில் அவள் ஸ்கிரிப்ட்டை வெளி மனிதர்கள் திருத்த அவள் அனுமதித்த தில்லை.

''என்னது ஒரு பக்கத்துக்கு வசனம்?'' என்று கிண்டலாய்ச் சொன்னவனை அசரவைக்கும் விதமாக அந்த முழுப்பக்க வசனத்தையும் தடங்கலில் லாமல் பாவங்களுடன் நடித்துக் காட்டிய தும், அவன் அவளது உள்ளங்கையைத் தொட்டு முத்த மிட்டதும் அதீதமோ என்று தோன்றினாலும் அவள் மனத்துக்குள் ரசித் தாள்.

''சாருலதா! ஏன் நீங்க சினிமாவுக்கு ட்ரை பண்ணக் கூடாது?''

''அவசியமில்லை.''

''சினிமாவில் நடிக்க மாட்டேன்னு ஏதாவது விரதமா?''

''அப்படியெல்லாமில்லே. ஒரு டீ.வி



சீரியல் பண்ணி இருக்கேன். ரெண்டு டாகு மெண்டரியில் நடிச்சிருக்கேன். சினிமாவில் நான் இயக்கப்படுகிறேன். நாடகம் முற்றி லும் என் ஆளுமைக்குட்பட்டது. சினிமா வில் காம்ப்ரமைஸ் பண்ணிக் கொள்ள நேரிடும்.''

''ரொம்ப டாமினேட்டிங் லேடியா இருப்பீங்க போலிருக்கே.''

''யெஸ் - நாடகத்தைப் பொறுத்த வரை... அம்மா நாடக நடிகை. நான் பி.ஏ. லிட்ரேச்சர் படிச்சேன். அது என்னை சுய மாகச் சிந்திக்க வைத்தது. நாடகக் குழுவை மாற்றி அமைத்தேன். கதறி அழுது, 'தொட்டுத் தாலி கட்டிய மனைவி' என வசனம் பேசும் பெண் பாத்திரங்களைச் சமுதாயப் பிரக்ஞை உள்ளவர்களாக மாற்றினேன். பெண்களைப் பற்றிய சுயசிந்தனையே என் நாடகங்களை முழுமைப்படுத்தியது. இந்த பூரணத்தன்மையை நான் ஏன் விட்டுக் கொடுக்க வேண்டும்?''

இரண்டாவது முறை நாடகத்தின் முழு ஒத்திகையைச் சரிபார்க்க வந்திருந்தான். காலையிலிருந்து மாலை வரை அந்த நாடகக் குழுவுடன் இருந்தான். விவாதங்களில் கலந்து கொண்டான். ரிகர்சல் முடிந்த பின்பும் அந்த வீட்டில் தங்கினான்.. அந்த முறைதான் அவன் அவளை ஒருமை

சத்தியப்ரியன்



ஒருவர் : ''பட்டி மன்றத்துக்கு தலைப்பு என்னங்க?''

இன்னொருவர் : ''மேலே, மேலே உயர்வது விலைவாசியா அல்லது கட்-அவுட்டா!''

- ஜெயாப்பிரியன்

யில் 'நீ' என்று அழைத்தான். அந்த முறை தான் அவன் தன் குடும்பத்தைப் பற்றி அதிகம் பேசினான். அப்பாவின் தோல் பதனிடும் பிஸினஸ் பற்றிச் சொன்னான். அண்ணா நகரில் இன்ன குறுக்குத் தெருவில் மரங்களுக்கும், புல் வெளிகளுக்கும் இடையில் இருந்த அவர்கள் வீட்டைப் பற்றிச் சொன்னான். அதில் இருக்கும் அவனுடைய அம்மாவைப் பற்றி ஒரு தம்பி, ஒரு தங்கையைப் பற்றிச் சொன்னான்.

மூன்றாவது முறை அவனை வீட்டுக்கு அழைக்கும் முன்னால் பீச்சில், கன்னிமாரா நூலகத்தில், ரெஸ்ட்டாரண்டில் என்று இருபதுக்கும் மேற்பட்ட சந்திப்புகள் நிகழ்ந்து விட்டன. நெருக்கம் வளர்ந்திருந்தது.

இந்த நெருக்கமே அவளை நீ என்று ஒருமையில் அவன் அழைக்கக் காரணமாய் இருந்திருக்க வேண்டும். வீட்டுக்கு வந்திருந்த பொழுது ஏதோ ஒரு சந்தர்ப்பத்தில் அவளை இழுத்து அணைக்கக் காரணமாக இருந்திருக்க வேண்டும். அந்த அணைப்பு அவனுடைய புறத் தோற்றத் தொடர்பில் அவளுக்கு கிளுகிளுப்பை ஏற்படுத்தினாலும் மனத்தளவில் ஒரு லேசான வெறுப்பு கிளர்ந்தது. இதற்குத்தானா என்ற கேள்வி எழுந்தது.

போகும் பொழுது சரவணன் ''அடுத்த முறை இதைப்பற்றிக் கொஞ்சம் ஸீரியஸா பேசலாம்னு இருக்கேன்'' என்று சொல்லி விட்டுப் போனான்.

''எதைப் பற்றி? இன்னும் அணைப்பைத் தாண்டி என்ன செய்யலாம் என்பதைப் பற்றியா?''

அவள் கேள்வி அவன் காதில் எட்டும் முன்பு அவன் மாருதி கிளம்பிப் போய் விட்டது.

அதிகப்படியாக மேக்-அப் எதுவும் செய்து கொள்ளவில்லை. ஜில்லென்ற தண்ணீரில் குளித்து விட்டு வந்திருந்தாள். கூந்தல் உலர வேண்டும் என்பதால் தளர்வாக நுனியில் ஒரு ரிப்பன் வைத்துக் கட்டிக் கொண்டிருந்தாள். கண்ணைப் பறிக்காத நிறத்தில் ஒரு புடைவையைக் கட்டிக் கொண்டாள்.

சரியாக ஒன்பது மணிக்குச் சரவணன் அவனுடைய மாருதி மினி வேனில் வந்து இறங்கினான்.

''ரிகர்ஸல் எதுவும் இல்லியா?'' என்றபடி வந்தான்.

''ஜூன், ஜூலை மாசம் நாடகக்காரங்களுக்கு ஆஃப் ஸீஸன்.''

அவர்கள் பொதுவான விஷயங்களைப் பேசிக் கொண்டிருந்தார்கள். பேச்சு நெடுகிலும் அவன் பேசுவதற்கு வாய் எடுத்து, முடியாமல் தவித்தது தெரிந்தது. அவள் நடுவில் டிஃபன் கொண்டு வரச் சொன்னாள்.

''வீடு பெரிசா இருக்கே'' என்றான் அவன்.''

''ஒரு கிரவுண்ட் நிலத்தில் கட்டினது. அம்மா ஒரு நடிகை என்னும் சலுகையில் கிடைத்த வீடு. கோடம்பாக்கத்தில் கூட ஒரு லைன் வீடு அம்மா பேரில் உண்டு. அதிலிருந்து மாச வாடகையே ஆயிரத்து நானூறு வருது.''

அவளுடைய அப்பா யார் என்ற அநாகரிகக் கேள்வியை அவன் கடைசி வரையில் கேட்கவே இல்லை.

''நீ ட்ராமா போடுவது ப்ராஃபிடபிலா இருக்கா?''

''புது ட்ராமான்னா ஸ்பான்ஸர்ஷிப்புக்கு அலையணும். ஆனா நான் கணக்குப் பார்ப்பதில்லை. ஸிட்டியில் அம்பை க்ரியேஷன்ஸ்னா தனிப் பேரு உண்டு..... அதுவும் தவிர நாடகங்களால் நற்போதனை பண்ண முடியுதோ இல்லையோ துர்ப்போதனை பண்ணவே முடியாது. அந்த விஷயத்தில் நான் நாடகங்களை நேசிக்கிறேன்....''

சொல்லும் பொழுது அவளையும் மீறி கண்களில் நீர் துளித்து விட்டது.

சரவணன் நெருங்கி அவள் கண்களில் வழிந்த கண்ணீரைச் சுண்டி விட்டான். சரவணனின் முகம் மிக அருகில் தெரிந்தது. மைக்ராஸ்கோப் வழியாகத் தெரியும் இலையின் ப்ளாஸ்மாக்களைப் போல சின்ன சின்னப் புள்ளிகளும், வரிகளுமாய் அவன் முகம் இருந்தது. கண்கள் பெரிதாகத் தெரிந்தன. நாசி பெரிதாகத் தெரிந்தது. மீசை பெரிதாகத் தெரிந்தது. அவனுடைய உஷ்ண ஸ்வாசம் அவள் கன்னங்களில் படர, ஒரு நிமிடம் தடுமாறிய சாருலதா, மறு நிமிடம், விலகிக் கொண்டாள்.

''ஐ லவ் யூ சாரு'' என்றான்.

''இந்த வார்த்தைகள் வெறும் காதல்

சம்பந்தப்பட்டவை மட்டும்தானா?'' என்றாள் அவனிடம்.

''மோர் தன் தட்.''

சொல்லி விட்டு சரவணன் தன் பாண்ட் பாக்கட்டிலிருந்து சிறிய அட்டைப் பேழையை எடுத்து நீட்டினான்.

''ஓபன் இட்'' என்றான்.

உள்ளே பச்சைக் கல் மோதிரம் ஒன்று வெல்வெட் சிம்மாசனத்தில் உட்கார்ந்திருந்தது.

''சுத்தமான மரகதம்.''

''எதுக்கு இது?''

''நான் உன்னைக் கல்யாணம் பண்ணிக்கப் போறதுக்கு அட்வான்ஸா கொடுத்தது.''

சாருலதா அந்த மோதிரப் பேழையை டெலிவிஷன் பெட்டியின் மேல் வைத்தாள்.

''இந்த விஷயத்தை உங்க வீட்டில் சொல்லிட்டீங்களா?''

''என் வீட்டைச் சம்மதிக்க வைப்பது எனக்குப் பெரிய காரியமில்லை.''

''வை டு யூ ப்ரபோஸ்டு மீ?''

''பிகாஸ் ஐ லவ் யூ.''

''பி ஸென்ஸிபில் சரவணன். காதல் என்னும் பரவச மயக்கத்தை இரண்டு பேரும் கடந்துட்டோங்கறத்துக்கு என்னோட இருபத்து ஏழு வயசும் உங்க முப்பத்திரண்டு வயசும் சாட்சி...''

''என் ரசனையும், உன் ரசனையும் ஒத்துப் போகுதே சாருலதா?''

''ரசனை ஒத்துப் போவது இங்கே மைய இசைவு இல்லை சரவணன். என் ரசனையோட நீங்க ஒத்துப் போகலாம். என் கருத்துக்களை ஏற்று மதிப்பவராக் கூட இருக்கலாம். நாம் பெண்களுக்குக் கொடுத்திருக்கும் சுதந்திர எல்லை ரொம்பச் சின்னது. ஆண்களைப் பொறுத்த வரையில் வீடு, வெளின்னு ரெண்டு சௌகரியம் அவனுக்குண்டு. வெளியில் அவன் தன் திறமைகளை, அது கலைத் தொடர்புடையதாகவும் தொழில் தொடர்புடையதாகவும் இருந்தா ஓம், வளர்த்துக் கொள்ளலாம். ஆயிரம்தான் பெண் விடுதலைன்னு முழங்கினாலும் வீடு என்று ஆண் ஏற்படுத்திக் கொண்டுள்ள சௌகரிய அமைப்பு இருக்கும்வரையில் பெண் சுதந்திரம் என்னும் பேச்சு கை உடைஞ்சுவர்றவனுக்கு பர்னால் மட்டும் தடவி விடுவது மாதிரி!''

''பெண்களும் வேலைக்குப் போக ஆரம்பிச்சதுக்கு அப்புறம் ஆண்கள் மாறவே இல்லைன்னு சொல்வது தப்பில்லையா சாரு?''

''மாறி இருக்காங்க. உத்யோகம் புருஷ லட்சணம் என்னும் நினைப்பு மாறி, பெண்களும் வேலைக்குப் போறாங்க. ஆனா வீட்டுப் பொறுப்பு? அது பெண்ணுக்குத்தான் என்னும் கட்டாய விதி மாறியிருக்கா?



முன்பெல்லாம் கேள்வியைக் குறிக்க 'questio' என்ற லத்தீன் வார்த்தையின் முதல், இறுதி எழுத்துகளை 'q.o' என வாக்கியத்தின் கடைசியில் குறிப்பிடுவார்கள். இதுவே நாளாவட்டத்தில் கொக்கியின் கீழ் பூஜ்யமாக (? என) இன்றைய வடிவத்தைப் பெற்றது.

- அ. ஷண்முகசுந்தரம்

## பலே! திருடர்கள்

இரும்புச் சாமான்களைத் திருடுவதில் கல்கத்தா திருடர்கள் சமர்த்தர்கள்.

கல்கத்தா டிராம் வண்டி பராமரிப்புத் தொழிலாளர்கள் போல உடைகளை அணிந்து கொண்டு ''கல்கத்தா டிராம் வண்டி பராமரிப்பு - வேலை நடக்கிறது'' என்ற அறிவிப்புப் பலகையைச் சாலையில் நட்டு விட்டு டிராம் வண்டி தண்டவாளங்களை அகற்றிக் கொண்டு போய்விட்டார்கள். அடுத்த நாள்தான் தண்டவாளத் திருட்டு கண்டு பிடிக்கப்பட்டது. திருடர்கள் அகப்படவில்லை.

'இந்தியன் எக்ஸ்பிரஸ்'
- என் பங்கஜம்

''உங்க வீட்டுக்கு நான் வரும் போதெல்லாம் உங்க பையன் 'கர்மா மாமா வந்திருக்கார்னு அறிவிக்கிறானே, என்ன அர்த்தம்?''

''அதுவா? பிஸ்கட் வாங்கி வரவங்களை பிஸ்கட் மாமான்னு கூப்பிடுவான்; சாக்லேட் வாங்கி வந்தா, சாக்லேட் மாமா; நீங்க வெறுங்கையோட வரீங்களா.... அதான்!''

- காழி சாமா



'கோயில்கள் பல கவனிப் பாரின்றிக் கிடக்கின்றன' என்ற பொதுவான கருத்து நிலவுகிறது. 'கருத்து நிலவுகிறதே தவிர, அதற்கு என்ன செய்வது?' என்று யாரும் யோசிப்பதில்லை. 'அரசாங்கமோ அறநிலையத் துறையோ கவனிக்க வேண்டிய விஷயம், நமக்கென்ன?' என்றுதான் அவரவரும் ஒதுங்கி விடுகிறார்கள்.



**ம**யிலை என்றதுமே கபாலீசுவரர் கோயில்தான் அனைவருக்கும் நினைவு வரும். ஆனால் அது தவிர, வெள்ளீசுவரர், விருபாட்சீசுவரர், மல்லீசுவரர், தீர்த்த பாலீசுவரர், காரணீசுவரர் என்ற பழமைச் சிறப்பு வாய்ந்த ஈசன் திருக்கோயில்களும் மயிலையில் உள்ளன.

'சரி இருக்கட்டும்; இதில் என்ன

வேலை பார்க்கலாம், சம்பாதிக்கலாம், எல்லாம் சரி. வீட்டை மறக்கும் வேலை என்றால் போய்ப்பார்னு சொல்ல ஆம்பளை கிடையாது சரவணன். வீடு ஆண்களுக்குச் சுதந்திரமானது. பெண்களுக்கு விலங்கு. நாளைக்கு நமக்குக் கல்யாணம் ஆகுதுன்னு வெச்சுக்குங்க. செத்தாலும் ஸ்டேஜில் சாகணும்னு நெனைக்கும் நானும், பிஸினஸ்ல அலையும் நீங்களும் நம்ம நினைப்பில் அகலாம இருந்துட்டா வீடு என்ன ஆகும்?''

''என்ன சொல்ல வர்ற நீ? உன்னை மாதிரி சுய சிந்தனையும், சுய தொழிலும் உள்ள பெண்கள் கல்யாணமே பண்ணிக்கக் கூடாதுங்கறியா?''

''அய்யய்யோ! நான் அப்படி சொல்லலை. இயற்கையைப் பழிப்பது பாவம். பொண்ணை மேல மேல படிக்க வைக்கா நீங்க. அதுக்கும் மேல படிச்ச மாப்பிள்ளையாப் பார்க்க வேண்டி வரும்னு சொல்றாங்க இல்லியா? அது மாதிரி பெண்ணின்

# மக்களின் மனமே கோயிலின் மேன்மை!

விசேஷம்?' என்றால் இருக்கிறது. 'கோயில்கள் பல கவனிப்பாரின்றிக் கிடக்கின்றன' என்ற பொதுவான கருத்து நிலவுகிறது. 'கருத்து நிலவுகிறதே தவிர, அதற்கு என்ன செய்வது?' என்று யாரும் யோசிப்பதில்லை. 'அரசாங்கமோ அற நிலையத் துறையோ கவனிக்க வேண்டிய விஷயம், நமக்கென்ன?' என்றுதான் அவரவரும் ஒதுங்கி விடுகிறார்கள்.

ஆனால் மயிலையில் சில மக்கள், 'இப்படி இருக்கக் கூடாது; நம்மால் இயன்ற அளவில் மயிலையில் உள்ள ஏதேனும் ஒரு கோயிலையாவது நல்ல படி பராமரிக்க உதவ வேண்டும்' என்று தீர்மானித்தார்கள். பொற்கொடி சுவாஸினி சத் சங்கம், கஸ்தூர்பா சங்கம் என்ற மாதர் அமைப்புகள் தவிர, காரணீசுவரர் பக்த ஜனசபை என்ற இளைஞர் அமைப்பும் சேர்ந்து கொண்டது. எல்லோருமாக மயிலை காரணீசுவரர் கோயில் மேம்பாட்டுக்கு உழைக்க ஆரம்பித்தார்கள். இவர்களுக்கு குருஜி சுந்தரராம் சுவாமிகள் வழிகாட்ட முன்வந்தார். பிறகென்ன, இந்த திருக்கோயில் இப்போது அற்புதமாகப் பராமரிக்கப்பட்டு வருகிறது.

அளவில் சிறியதாயினும் பழமைச் சிறப்பாலும் பக்திச் சிறப்பாலும் பெருமை பெற்று விளங்குகிறது இக் கோயில். அதிலும் பொற்கொடி அம்மையின் திருக்கோலம் எழுத்தில் வடிக்க இயலாத பேரழகு கொண்டது.

வடமாநிலம் - ஒன்றிலிருந்து வந்த தனஞ்செயன் என்ற ஓர் அந்தண இளைஞன் தன் வாழ்க்கையில் எதிர்கொண்ட கசப்பான அனுபவங்களுக்குப் பிறகு மயிலையில் அமைதி கண்டான் என்பதும் கபாலீசுவரரைக் கண்டு வணங்கிய அந்த இளைஞன் எழுப்பித்த கோயில் இந்தக் காரணீசுவரர் என்றும் ஒரு வரலாறு கூறுகிறது.

மாதந்தோறும் ஞாயிற்றுக் கிழமையன்று இங்கு பன்னிரு திருமுறை ஓதுகிறார் தருமபுரம் சுவாமிநாதன். இது கடந்த ஆறு ஆண்டுகளாய் நடக்கிறது. இன்னும் விஷ்ணு சகஸ்ரநாம பாராயணம், லலிதா சகஸ்ரநாம பாராயணம் எல்லாம் உண்டு. காழியூர் நாராயணன் போன்றவர்களின் பிரவசனங்கள் அவ்வப்போது.

காரணீசுவரர் - பொற்கொடி அம்மை சந்நிதிகள் தவிர, சுற்று வளாகத்தில் விநாயகர், முருகன், மகாவிஷ்ணு, அண்ணாமலையார், தட்சிணாமூர்த்தி, துர்க்கை முதலியவர்கள் அருள்பாலிக்கிறார்கள். நவக்கிரகங்களில் ஒரு விசேஷம், சூரிய பகவான், சாயாதேவி - உஷா தேவி உடனுறைய இருப்பதாகும். தல விருட்சம் அரசமரம்.

எல்லாத் திருவிழாக்களும் சிறப்புற நடக்கும் காரணீசுவரர் கோயில், 'சுற்று வட்டார மக்கள் மனம் வைத்தால் எந்தக் கோயிலும் சிதிலமடைந்தும் கவனிப்பாரற்றும் இராது' என்பதை எல்லோருக்கும் நிரூபித்துக் கொண்டிருக்கிறது.

- கலைசைக்கிழார்

படிப்புக்கும், திறமைக்கும் ஏத்தா மாதிரி படிப்பு கம்மியா, ஒத்துப் போற மாதிரியா மாப்பிள்ளை பார்க்கணும் என்னும் நினைப்பு வரும் வரை.....''

சரேல் என்று சரவணன் கண்களில் ஒரு கோப மின்னல் எழுந்ததைப் பார்த்தாள். யுகம், யுகமாய் ஆண் என்னும் நினைப்பு ஏற்படுத்திய மின்னல்.

அவன் புறப்பட்டான்.

''அடுத்து எப்போ வருவீங்க?''

''சொல்றேன்.''

சொல்வதாகச் சென்றவன் சொல்லவே இல்லை! அவள் தன் அடுத்த நாடகத் தயாரிப்பில் மும்முரமாகி, மேடையேற்ற நாள் குறிக்கும் வரையில் அவன் நினைப்பு வரவில்லை. அழைப்பு அனுப்ப டைரியைத் திறந்த பொழுதுதான் அவன் ஞாபகம் வந்தது. இரண்டு மாதமாக அவனிடமிருந்து தகவல் கூட இல்லை என்பது ஞாபகம் வந்தது. சாருலதா சிரித்துக் கொண்டாள்.



# அன்புள்ள அலமு அத்தை,

தாங்க்யூ! தாங்க்யூ! 'ஹீ மேன்' பொம்மை சூப்பர். பக்கத்து வீட்டு விக்ரம் வீட்டுக்குக் கொண்டு போய் விளையாடிட்டுத் தரேன்னான். நான் கொடுக்கலை. இங்கேயேதான் விளையாடணும்னு சொன்னேன். அப்புறம் ஒத்துக்கிட்டான்.

ஹீ மேனுக்கும் கிருஷ்ணருக்கும் என்ன வித்தியாசம்னு உன் லெட்டரை கவிழ்த்துப் படிக்காமயே கண்டுபிடிச்சுட்டேன்... எப்படி தெரியுமா? அதை அப்படியே ஒரு அட்டையில ஒட்டி, சுவத்துல சாய்ச்சு வைச்சேன். அதுக்கு நேரா தலைகீழா நின்னேன் - கிடுகிடுனு படிச்சுட்டேன்! எப்படி என் ஐடியா...? நான்தான் தினமும் யோகாசனம் பண்ணுறேனே - அதனால ஆடாம, விழாம, ஜோரா தலைகீழாய் நிப்பேன்.

தினமும் யோகாசனம் செய்தா ஹீ மேன் மாதிரி பலசாலியாகலாம்னு அப்பா சொல்லியிருக்கார். ஒவ்வொரு மாசமும் என்னைச் சுவத்துல சாய்ஞ்ச மாதிரி நிக்க வைச்சு உயரத்தைப் பென்சிலால் குறிப்பார் அப்பா. அந்த சுவத்துல பார்த்தா ஏணிப்படி மாதிரி என் தலை உயர அடையாளம் ஏறிக்கிட்டே இருக்கு... யோகாசனம் செய்யறதுனாலதான்னு அப்பா சொல்றார்.

அதே மாதிரி பப்லுவை நிக்கச் சொல்லி அளவு குறிப்பார் அப்பா. அது நைலா துணிக் கால்ல நின்னு 'சீட்டிங்' பண்ணும். நான் பார்த்துட்டுக் கத்தினால் 'சிரி சிரி'ன்னு சிரிக்கும். எனக்கும் சிரிப்பாய் வரும்.

ஆனால் பப்லுவுக்கு ஸ்கூல் போகும் போது சிரிப்பே வராது. அழுகைதான் வரும். இடி இடிச்சு, மின்னல் மின்னி இருட்டா மழை பெய்யற போதும் அது அழும். அம்மாவைப் போய்க் கட்டிக்கும்.



எனக்கு இடின்னால் பயம் கிடையாது. அழ மாட்டேன். ஆனால் அப்பாகிட்டே போய் நின்னுப்பேன்.

தீபாவளி அன்னைக்கு இங்கே ஒரே மழை. பட்டாசெல்லாம் இன்னைக்குத் தான் விட்டோம்.

ஹோம் ஒர்க் பண்ணணும்.

பை!

அன்புள்ள,

அருண்

# சிவகாமியின் சபதம்

## முப்பத்தாறாம் அத்தியாயம்
## ''வெற்றி அல்லது மரணம்''

வெள்ளைக் கொடி இறக்கப்பட்டதன் பொருள் என்ன, அதன் காரணம் என்னவாயிருக்கும் என்று யோசித்தவாறு சேனாதிபதி பரஞ்சோதி ஒரு நிமிஷம் நின்ற இடத்திலே நின்றார். அந்த நிமிஷத்திலேயே அவர் மனத்தில் உதித்த கேள்விகளுக்கு விடைசொல்வது போன்ற இந்திரஜாலக் காட்சி கோட்டை மதில் நெடுகக் காணப்பட்டது. இத்தனை நாளும் வெறுமையாயிருந்த அந்த நெடிய விசாலமான மதிலின் மீது கையில் வேல் பிடித்த வீரர்கள் வரிசையாக நின்றார்கள். மாலை வேளையின் மஞ்சள் வெயிலில் அவர்கள் தலையில் அணிந்திருந்த இரும்புத் தொப்பிகளும், மார்பில் அணிந்திருந்த செப்புக் கவசங்களும், கையில் பிடித்த வேல்களின் கூரிய முனைகளும் பளபளவென்று ஒளி வீசித் திகழ்ந்தன.

''மகாராஜாதி ராஜ, சளுக்க குல திலக, திரிபுவன சக்கரவர்த்தி, சத்தியாச்ரய புலிகேசி நீடூழி வாழ்க!'' என்று இடி முழக்கக் குரல் ஒலிக்க, அதைத் தொடர்ந்து, ''ஜய விஜயீ பவ!'' என்று ஆயிரக்கணக்கான குரல்கள் ஏக காலத்தில் ஆர்ப்பரித்தன.

அந்த அதிசயக் காட்சியைப் பார்த்துக் கொண்டு சேனாதிபதி பரஞ்சோதி சிறிது நேரம் திகைப்புற்று நின்றார். ''அதோ! அதோ!'' என்று அவர் பக்கத்திலிருந்த வீரர்களில் ஒருவன் கூவியவண்ணம் கோட்டை முன் வாசலின் உச்சியைச் சுட்டிக்காட்டினான். அங்கே நெடிதுயர்ந்த கம்பீர உருவம் ஒன்று நின்று சுற்று முற்றும் பார்த்துக் கொண்டிருந்தது. ஆ! அந்த உருவம் புலிகேசிச் சக்கரவர்த்தியினுடையதுதான்; சந்தேகமில்லை.

வெள்ளைக் கொடி இறங்கியதன் தாத்பரியம் பரஞ்சோதிக்கு அந்தக் கணமே நன்கு விளங்கி விட்டது. புலிகேசிச் சக்கரவர்த்தி யுத்த களத்திலிருந்து தப்பிப் பிழைத்து இரகசியச் சுரங்க வழி மூலமாகவோ, அல்லது இரவு வேளையில் பல்லவ வீரர் காவலை மீறி மதில் ஏறிக் குதித்தோ, கோட்டைக்குள்ளே வந்து சேர்ந்து விட்டார். சமாதானம் என்ற பேச்சு இனி இல்லை. யுத்தம் செய்தேயாக வேண்டும்; கோட்டையைத் தாக்கியே தீர வேண்டும். இன்னும் ஆயிரமாயிரம் மனிதர்களின் இரத்தம் வெள்ளமாக ஓடியேயாக வேண்டும். வாதாபி நகரம் தீப்பட்டு எரிந்தே தீர வேண்டும்.

இப்படிச் சேனாதிபதி எண்ணமிட்டுக் கொண்டிருக்கையில் கோட்டை வாசல் உச்சியிலிருந்து திடீரென்று ஓர் அம்பு ஜிவ்வென்று பறந்து வந்தது. பரஞ்சோதியின் தலைக்கு நேராக அந்த அம்பு வந்ததைப் பார்த்து அருகில் நின்ற வீரர்கள் ஹாஹாகாரம் செய்தார்கள். ஒரு க்ஷண நேரம் அவர்கள் அவ்வளவு பேருக்கும் நெஞ்சத் துடிப்பு நின்று போயிருந்தது. நல்லவேளையாக அந்த அம்பு சேனாதிபதியின் தலைக்கு மேலே ஒரு சாண் உயரத்தில் பாய்ந்து சென்று அவருக்குப் பின்னால் பூமியில் குத்திட்டு நின்றது.

மற்றவர்கள் எல்லாரும் திகிலடைந்த போதிலும் சேனாதிபதி ஒரு சிறிதும் கலங்க

அமரர் கல்கி

வில்லை. முகத்தில் புன்னகையுடன் தரையில் பாய்ந்த அம்பை எடுக்கும்படி கட்டளையிட்டார். அதன் இறகில் ஒரு சிறு ஓலைச் சீட்டு கட்டியிருந்தது. அதை எடுத்துப் பரஞ்சோதி படித்தார். ''வெற்றி அல்லது மரணம்'' என்று அதில் எழுதியிருந்தது.

பரஞ்சோதியின் இருதயத்திலிருந்து ஒரு பெரிய பாரம் இறங்கியது போல் இருந்தது. அவருடைய உள்ளத்திலே நடந்து கொண்டிருந்த போராட்டத்திற்கு இனி இடமில்லை. மீண்டும் யுத்தம் தொடங்கி இரத்த வெள்ளத்தைப் பெருக்கும் பொறுப்பு புலிகேசியின் தலை மேல் விழுந்து விட்டது. இனிமேல் மனத்தில் சஞ்சலம் எதுவுமின்றிக் கோட்டைத் தாக்குதலை நடத்தலாம்.

பரஞ்சோதி மேற்படி தீர்மானத்துக்கு வந்ததும், பக்கத்தில் நின்ற வீரனைப் பார்த்து, ''சடையா? அதோ அந்தக் கோட்டை வாசலில் உள்ள கணபதி விக்கிரகம் கண்ணுக்குத் தெரிகிறதா!'' என்று கேட்டார்.

''தெரிகிறது, சுவாமி! தாங்கள் அந்த விக்கிரகத்தின் அருகில் நின்று பார்த்த போது நானும் கவனித்தேன்!'' என்றான் சடையன்.

''நல்லது! உனக்கு மிகவும் முக்கியமான காரியம் ஒன்றைத் தருகிறேன். சூரியன் அஸ்தமித்து நன்றாக இருட்டியதும் நீயும் இன்னும் பத்து வீரர்களும் மதிற்சுவர் மீது நிற்கும் சளுக்க வீரர் கண்ணில் படாமல் கோட்டை வாசலுக்குப் போக வேண்டும். போய் அந்தக் கணபதி விக்கிரகத்துக்கு ஒருவிதமான சேதமும் ஏற்படாமல் பெயர்த்து எடுத்து என்னுடைய கூடாரத்துக்குக் கொண்டு வர வேண்டும். தெரிகிறதா? நீ அந்த விக்கிரகத்தைப் பத்திரமாகக் கொண்டு வந்து சேர்ப்பதைப் பொறுத்துத்தான் நமக்கு இந்தக் கடைசி யுத்தத்தில் வெற்றி ஏற்பட வேண்டும்!'' என்றார் சேனாதிபதி.

''அப்படியே, சேனாதிபதி! விநாயகரின் விக்கிரகத்தைச் சர்வஜாக்கிரதையாகக் கொண்டு வந்து கூடாரத்தில் சேர்க்கிறேன்!'' என்றான் சடையன்.

உடனே சேனாதிபதி குதிரையைத் திருப்பிக் கொண்டு மாமல்ல சக்கரவர்த்தி தங்கியிருந்த கூடாரத்தை நோக்கி விரைந்து சென்றார்.

**ச**க்கரவர்த்தியின் கூடாரத்தில் ஏற்கெனவே மற்ற தளபதிகள் எல்லோரும் வந்து சேர்ந்திருந்தார்கள். முடிவான கட்டளையைச் சக்கரவர்த்தியிடம் பெற்றுக் கொண்டு போவதற்காக அவர்கள் வந்திருந்தார்கள். சேனாதிபதி பரஞ்சோதியின் வருகைக்காகச் சக்கரவர்த்தி காத்துக் கொண்டிருந்தார். அவர் முகத்தில் அமைதி குடிகொண்டிருந்தது. தமக்கு அருகில் நின்றவர்களிடம் அவர் சாவதானமாகப் பேசிக் கொண்டிருந்தார். கோட்டை வாசலில் பறந்த வெள்ளைக் கொடி இறக்கப்பட்ட விவரமும், மதிற்சுவரின் மேல் சளுக்க வீரர் போருக்கு ஆயத்தமாய் நின்றதும் அங்கிருந்தவர்களுக்கு இன்னும் தெரியாது. சளுக்க வீரரின் யுத்த கோஷத்தை அவர்கள் பல்லவ வீரரின் கோஷம் என்று எண்ணிக் கொண்டிருந்தார்கள்.

அவ்விதம் அமைதி குடிகொண்டிருந்த சக்கரவர்த்தியின் சந்நிதானத்தில் பரஞ்சோதி புயல் நுழைவது போல் நுழைந்து முதலில் சக்கரவர்த்திக்கு வணக்கம் செலுத்தினார்.

''பிரபு!...'' என்று அவர் மேலும் பேசவதற்குள்ளே மாமல்லர் குறுக்கிட்டுக் கூறினார் :

''சேனாதிபதி! ஏன் இவ்வளவு பரபரப்பு! இந்த மூன்று நாளும் சிந்தனை செய்ததில் உம்முடைய யோசனைதான் நியாயத்துக்கும் தர்மத்துக்கும் உகந்தது என்ற முடிவுக்கு வந்தேன். கோட்டையின் சரணாகதியை ஒப்புக் கொண்டு யுத்தத்தை நிறுத்துவது என்று முடிவு செய்து விட்டேன்!'' என்றார்.

சேனாதிபதி முன்னைக் காட்டிலும் அதிக பரபரப்பை அடைந்து, கண்ணில் நீர் ததும்பத் தொண்டை அடைக்கக் கூறினார் :

''பிரபு! நான் அறிவீனன்; நான் சொன்ன யோசனை அபத்தம். தாங்கள் முதலில் இட்ட கட்டளைதான் நியாயம், தர்மம் எல்லாம். என் யோசனைப்படி மூன்று நாள் தாமதித்ததே பெருந்தவறு. பிரபு! கோட்டை வாசலில் வெள்ளைக் கொடி இறங்கி விட்டது. மதிற்சுவர் மேல் சளுக்க வீரர்கள் போர்க் கோலம் பூண்டு நிற்கிறார்கள்...''

பரஞ்சோதி இவ்விதம் சொன்னதைக் கேட்டு, அங்கிருந்தவர்கள் அனைவரும் அளவற்ற வியப்பும் ஆத்திரமும் அடைந்தார்கள்.

சக்கரவர்த்தி தாம் வீற்றிருந்த ஆசனத்திலிருந்து துள்ளிக் குதித்து எழுந்து, ''சேனாதிபதி! நீர் சொல்லுவது உண்மைதானா!'' என்று கர்ஜித்தார்.

''உண்மை, பிரபு! என் கண்ணாலேயே பார்த்தேன்! பார்த்து விட்டு நேரே இவ்விடம் வருகிறேன்.''

''இந்த மாறுதலுக்குக் காரணம் என்னவென்று ஏதேனும் ஊகிக்க முடிகிறதா?'' என்றார் மாமல்லர்.

''ஊகம் வேண்டியதில்லை, பிரபு! புலிகேசி போர்க்களத்தில் சாகவில்லை. தப்பிப் பிழைத்துக் கோட்டைக்குள்ளே எப்படியோ வந்து விட்டான். கோட்டை வாசல் உச்சியில் வாதாபிச் சக்கரவர்த்தி நின்று தமது சைனியத்தைப் பார்வையிட்டதையும் நான் கண்ணால் பார்த்தேன். சந்தேகத்துக்கு

இடமில்லாதபடி இதோ புலிகேசியின் ஓலையும் இருக்கிறது. அம்பின் இறகிலே கட்டி இந்த ஓலை எனக்குக் கிடைத்தது!'' என்று சொல்லிக் கொண்டே, ''வெற்றி அல்லது மரணம்'' என்று எழுதியிருந்த ஓலைத் துண்டைச் சக்கரவர்த்தியிடம் பரஞ்சோதி காட்டினார்.

''ரொம்ப நல்லதாய்ப் போயிற்று. வாதாபிக்கு நேரும் கதிக்குப் பாவம் பழி எல்லாம் அவன் தலைமேல்!'' என்று மாமல்லர் உற்சாகமான குரலில் கூறிவிட்டு, ''சேனாதிபதி! இனிமேல் சந்தேகம் ஒன்றுமில்லையே, கோட்டையைத் தாக்க ஆரம்பிக்கலாமல்லவா?'' என்று கேட்டார்.

''இனி ஒரு சந்தேகமும் இல்லை. பிரபு! எல்லாம் ஆயத்தமாயிருக்கிறது. இன்னும் ஒரு முகூர்த்த நேரத்தில் நமது யானைப் படை கோட்டை வாசலைத் தகர்க்க ஆரம்பித்து விடும். நம் வீரர்கள் கோட்டை மதிலைத் தாண்டி உள்ளே பிரவேசிக்க ஆரம்பித்து விடுவார்கள்!'' என்றார் சேனாதிபதி.

பின்னர் அங்கு நின்ற தளபதிகளைப் பார்த்து, ''எல்லோரும் அவரவருடைய படைகளுக்குச் செல்லுங்கள். நகரத்துக்குள்ளே எப்படி நடந்து கொள்ள வேண்டும் என்பதை இன்னொரு தடவை நம் வீரர்களுக்கெல்லாம் ஞாபகப்படுத்துங்கள். பேரிகை முழக்கம் கேட்டதும் புறப்படுவதற்கு ஆயத்தமாயிருங்கள்'' என்றார்.

இதைக் கேட்டதும் அங்கு நின்ற தளபதிகள் எல்லாரும் சக்கரவர்த்திக்கும் சேனாதிபதிக்கும் வணக்கம் செலுத்தி விட்டு உற்சாகத்துடன் விரைந்து வெளியேறினார்கள். சக்கரவர்த்தியும், அவருடைய மெய்க்காவலர் இருவரும், மானவன்மரும், சேனாதிபதி பரஞ்சோதியும் மட்டும் அங்கே மிச்சமாயிருந்தார்கள்.

''சேனாதிபதி! நகரத்துக்குள் நடந்து கொள்ள வேண்டியது பற்றி நம் வீரர்களுக்கு என்ன கட்டளையிட்டிருக்கிறீர்கள்?'' என்று கேட்டார் மாமல்ல சக்கரவர்த்தி.

''பிரபு! குழந்தைகளுக்கும் ஸ்திரீகளுக்கும் எந்தவிதத்திலும் துன்பமுண்டாக்கக் கூடாது என்று கட்டளையிட்டிருக்கிறேன். ஆண் மக்களில் எதிர்த்தவர்களையெல்லாம் கொன்று விடும்படியும், பணிந்தவர்களையெல்லாம் சிறைப்பிடிக்கும்படியும் கட்டளையிட்டிருக்கிறேன். வாதாபி நகரில் ஒரு வீடு மிச்சமில்லாமல் எரிந்து சாம்பலாக வேண்டுமென்று கட்டளையிட்டிருக்கிறேன். தீயை அணைக்க முயல்வோரை எல்லாம் கொன்று விடும்படி சொல்லியிருக்கிறேன். நகரை விட்டு ஓட முயலும் பிரஜைகளைப் போக விடும்படியும், ஆனால் அவர்கள் எந்தவிதமான பொருளையும் கொண்டு போக விடக் கூடாது என்றும் ஆக்ஞையிட்டிருக்கிறேன். நம்முடைய வீரர்கள் வாதாபி நகரிலிருந்து அவரவரால் முடிந்த வரையில் பொருள்களைக் கொண்டு வந்து சேர்க்க வேண்டுமென்றும், ஒவ்வொருவரும் கொண்டு வருவதில் பாதிப் பொருள் அவர்களுக்கே திருப்பிக் கொடுக்கப்படும் என்றும் சொல்லியிருக்கிறேன். இன்னும் ஏதேனும் கட்டளையிருந்தால் தெரியப்படுத்த வேண்டும்'' என்றார் பரஞ்சோதி.

''சேனாதிபதி! நான் சொல்லுவதற்கு ஒரு விஷயமாவது மிச்சம் வைக்கவில்லை. எல்லாம் முன்யோசனையுடன் செய்திருக்கிறீர்கள்!'' என்றார் மாமல்லர்.

''பிரபு! இன்னும் ஒரு முக்கியமான காரியம் இருக்கிறது. அதை நம் இலங்கை இளவரசருக்கென்று வைத்திருக்கிறேன். தாங்கள் கட்டளை பிறப்பிக்க வேண்டும்!'' என்றார்.

மாமல்லர் மறுமொழி சொல்லுவதற்குள்ளே, ''சேனாதிபதியின் கட்டளைக்குக் காத்திருக்கிறேன்!'' என்றார் மானவன்மர்.

''வாதாபிச் சக்கரவர்த்தியின் அரண்மனையில் உலகத்திலே வேறு எந்த நாட்டு அரசர் அரண்மனையிலும் இல்லாத செல்வங்கள் இருப்பதாகக் கேள்விப்பட்டிருக்கிறேன். ஹர்ஷவர்த்தனர் ஐந்து வருஷத்துக்கொரு தடவை தம் செல்வங்களையெல்லாம் பிரஜைகளுக்குத் தானம் செய்து விடுகிறார். மகாலோபியான புலிகேசி அப்படியெல்லாம் செய்வதில்லை. முப்பது வருஷமாகச் சேகரித்த குபேர சம்பத்துக்கள் புலிகேசியின் அரண்மனையில் இருக்கின்றன. அந்தச் செல்வங்களைப் பத்திரமாய்ப் பாதுகாத்துக் கொண்டு வர வேண்டிய பொறுப்பை மானவன்மர் ஏற்றுக் கொள்ள வேண்டும். எல்லாச் செல்வங்களையும் அப்புறப்படுத்தி விட்டுப் பிறகுதான் அரண்மனையை எரிக்க வேண்டும். இந்தக் காரியத்தில் மானவன்மருக்கு ஒத்தாசை செய்ய ஐயாயிரம் வீரர்களைத் தனியாக வைத்திருக்கிறேன்.''

இதையெல்லாம் மாமல்லரைப் பார்த்தே சேனாதிபதி கூறினார்.

''சேனாதிபதி! தங்கள் விருப்பத்தை மானவன்மர் நிறைவேற்றுவார். ஆனால், வாதாபி நகருக்குள்ளே அரண்மனைச் செல்வங்களைத் தவிர காப்பாற்ற வேண்டிய செல்வம் வேறொன்றுமில்லையா? அதைப் பற்றி என்ன ஏற்பாடு செய்திருக்கிறீர்கள்?'' என்று மாமல்லர் கேட்ட போது அவரது குரல் கம்மிற்று.

சிவகாமி தேவியைப் பற்றித்தான் சக்கரவர்த்தி கேட்கிறார் என்பதைப் பரஞ்சோதி தெரிந்து கொண்டார்.

## அருள்வாக்கு



சூட்டாகத் தெரிகிற சாஸ்திரங்கள் வாஸ்தவத்தில் கட்டுமில்லை. நிஜ ஸ்வதந்திரமான மோக்ஷத்துக்கு வழி பண்ணுவது அதுதான். 'தொம்பங் கூத்தாடி' என்பார்கள். 'ஸ்தம்பக் கூத்தாடி' என்பதுதான் அப்படித் திரிந்து வந்திருக்கிறது. ஸ்தம்பம் என்பது தூண். 'மாஜிக் ஷோ'வில் தொம்பங் கூத்தாடி வருவான். அநேகத் தூண்களில் ஒன்றில் அவனை ஏகப்பட்ட கட்டுப் போட்டுக் கட்டி வைத்திருக்கும். ஒரு திரையால் சொடக்குப் போடுகிற நாழி அவனை மறைத்து விட்டுத் திரையை எடுப்பார்கள். அந்த க்ஷண காலத்துக்குள் அவன் எப்படியோ அத்தனை கட்டுக்களையும் அவிழ்த்து விட்டு அந்தத் தூணிலிருந்து விடுபட்டு, அதோடு மட்டுமில்லாமல் இன்னொரு தூணில் அதே மாதிரி அவ்வளவு கட்டுக்களையும் போட்டுக் கொண்டு காணப்படுவான். அவனுக்கு அப்படி ஒரு தந்திரம் தெரியும். முதலில் கட்டின போது கை, கால்களை ஒரு மாதிரி அகட்டி (அகற்றி) வைத்துக் கொண்டிருப்பான்; திரை போட்டவுடன் அவற்றைக் குறுக்கிக் கொள்வான்; உடனே கட்டுத் தளர்ந்து விடும்; அது கீழே விழுவதற்குள் மறுபடியும் அதே மாதிரி அகட்டிக் கொண்டு இன்னொரு தூணுக்குப் போய் விடுவான். இப்படித் தன் அங்கங்களைக் குறுக்கிக் கொள்வதாலேயே, அவற்றுக்கு மேலே போட்ட கட்டு விரிகிற மாதிரிதான் சாஸ்திரக் கட்டுக்களும். அஹங்காரத்தை மேலேயிருந்து கட்டுவது சாஸ்திரம். நாமே உள்ளுக்குள்ளிருந்து நம்மைக் கட்டுப்படுத்திக் கொள்வதற்காக நம்மைப் பக்குவப்படுத்துவதற்கே இந்தக் கட்டு. ஆசாரக் கட்டுக்களைப் போட்டுக் கொண்டால் நிஜமான ஆத்ம ஸ்வதந்திரத்தை அடையலாம்.

- ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய ஸ்வாமிகள்.

''பிரபு! அந்தப் பொறுப்பை மட்டும் அடியேன் வைத்துக் கொண்டிருக்கிறேன். வேறு யாரிடமும் அதை ஒப்புவிக்க எனக்கு விருப்பமில்லை'' என்றார்.

''ரொம்ப நல்லது. சத்ருக்னன் இது வரையில் செய்தி ஒன்றும் கொண்டு வரவில்லையா?''

''ஒவ்வொரு கணமும் அவனைத்தான் எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறேன்.''

''சேனாதிபதி! எல்லாருக்கும் கட்டளையிட்டீர். எனக்கு மட்டும் ஒரு வேலையும் தரவில்லையே? நான் என்ன செய்யட்டும்?''

''பிரபு! தாங்கள் இங்கேயே, இந்தக் கூடாரத்திலேயே இருக்க வேணும் என்பது அடியேன் பிரார்த்தனை.''

''வாதாபி நகரத்துக்குள் நான் வரவே வேண்டாமா?''

''அவசியமானால் சொல்லியனுப்புகிறேன்; உடனே வந்து சேர ஆயத்தமாயிருக்க வேணும். இப்போது என்னோடு கண்ணனை ரதத்துடன் அனுப்பி வைக்க வேணும்!''

''அப்படியே அழைத்துக் கொண்டு போங்கள். இங்கே நான் முள்ளின் மேல் இருப்பது போலத்தான் இருப்பேன்.''

''பிரபு! விநாயகப் பெருமான் கருணையால் எல்லாம் நன்றாக முடியும். கவலைப்பட வேண்டாம். அவசியம் ஏற்பட்டதும் உடனே சொல்லியனுப்புகிறேன். இப்போது விடை கொடுங்கள்.''

''போய் வாருங்கள், சேனாதிபதி! வழக்கம் போல் வெற்றி மாலை சூடித் திரும்புங்கள்!''

சேனாதிபதி கூடாரத்திலிருந்து விரைந்து சென்றார். அவர் போனவுடன் சக்கரவர்த்தி, ''இது என்ன, திடீரென்று விநாயகக் கடவுளிடம் இவருக்கு இவ்வளவு பக்தி!'' என்று வியந்தார்.

(தொடரும்)

# சத்யம்; சிவம்; சுந்தரம்

உங்கள் கடிகாரங்களில் நேரத்தைச் சரிபார்த்துக் கொள்ளலாம். ஞாயிறு மாலைகளில் 5:30க்குத் தொடங்குகிற சத்யசாயி பஜன் மிகச் சரியாக 6:30க்கு நிறைவடையும்.

பரமம் பவித்ரம் பாபா விபூதிம்
பரமம் விசித்ரம் லீலா விபூதிம்
பரமார்த்த மிஷ்டார்த்த மோக்ஷப்
பிரசாதம்
பாபா விபூதிம் இதமாச்ரயாமி...

என்று ச்லோகம் முழங்கும் போது அடியார்களின் கரங்களில் 'இராணுவ' ஒழுங்கோடு விபூதிப் பிரசாதம் வழங்கப்படும்.

பஜன் நேரத்தில் வரிசையாக உட்காரும் ஒழுங்கு.. கட்டுப்பாட்டோடு பஜன் பாடல்களைச் சேர்ந்து பாடுகிற ஆனந்தம்... எல்லாம் ஒருமுறை 'சுந்தரம்' சென்று வந்தவர்களை திரும்பத் திரும்ப வருமாறு வசீகரிக்கக்கூடியவை. ராஜா அண்ணாமலைபுரத்திலுள்ள பக்ஸ் சாலையிலிருக்கும் சுந்தரத்தில் செருப்புகளைப் பெற்று அடையாள வில்லை தருகிறவர்கள் முதல், இனிமையான குரல் வளத்தில் பஜன் பாடல்களை வழங்குகிறவர்கள் வரை - அனைவருமே சேவாதளத் தொண்டர்கள்தாம். அவர்கள் அடியார்களை வரவேற்கும் இனிமையும் அழகும் ஒழுங்கும் மெய்சிலிர்க்கப் பண்ணுகிறவை. பஜன் பாடல்களைத் தவிர வீண் பேச்சுகள் ஏதும் உங்கள் காதுகளில் விழாது.

பகவான் பாபாவின் அருள்வாக்கின்படி சத்யம் சிவம் சுந்தரம் என்கிற பெயர்களில் முறையே பம்பாய், ஹைதராபாத், சென்னையில் சத்யசாயி சேவா மையங்கள் உருவாகியுள்ளன. இங்கே பக்திமார்க்கத்தை அடிப்படையாக வைத்து எண்ணற்ற அறப்பணிகளிலும் ஈடுபடுகிறார்கள்.

பதினெட்டுப் புராணங்களின் சாரம் என்பதாய் பகவான் கூறுவது 'எல்லோரையும் நேசி... எல்லோருக்கும் தொண்டு செய்.

'எப்போதும் பிறருக்கு உதவு.. ஒரு போதும் பிறர் மனத்தை நோகப் பண்ணாதே..'

மதங்களைக் கடந்து மனிதாபிமான உணர்வோடு செயல்படுகிற ஓர் ஆரோக்கியமான இயக்கம் இந்த சேவா சமிதிகள். உலகெங்கிலும் 120 நாடுகளில் சத்ய சாயி சேவா சமிதிகள் இயங்கி வருகின்றன. 'மதம் கடந்து' என்று சொன்னது வெறும் சம்பிரதாயமான ஒன்றல்ல.

அண்மையில், இஸ்லாமிய சகோதரர்கள் புனித ரம்சான் நோன்புக் காலம் நிறைவடைந்து, அதற்கான வழிபாட்டுக்காகக் கூடிய போது... தண்ணீர்ப் பந்தல்கள் மாதிரி அமைத்துப் பத்தாயிரம் பேருக்குக் குளிர் பானங்களை வழங்கியது இந்த சமிதி. சாந்தோம் தேவாலயங்கள் போன்றவற்றின் விழாக்களின் போது அந்தச் சகோதரர்களுக்கு உதவும் பணியில் ஈடுபடுகிறவர்கள் இந்தச் சேவாதளத் தொண்டர்கள்.

பக்தி யோகம், ஞான யோகம், கர்மயோகம் என்ற பகவத் கீதையின் கட்டளைகளை அப்படியே ஏற்று ஆன்மீகப் பணியிலும், கல்விப் பணியிலும், சமுதாய நலப் பணியிலும் சத்ய சாயி நிறுவனங்களை முடுக்கி விட்டிருப்பவர் பகவான்.

* சுந்தரம்...





✱ கபாலீசுவரர் திருக்குளத்தைத் தூய்மைப்படுத்தும் பணியில்...

தமிழ் நாட்டில் 475 பின்தங்கிய கிராமங்களைத் தேர்ந்தெடுத்து, அவற்றுக்குத் தாயாய்த் தந்தையாய் எல்லாமாகவும் இருந்து கவனித்துக் கொள்கிற பெரும் பொறுப்பையும் சமிதி ஏற்றுள்ளது. இந்தக் கிராம மக்களின் கல்வி, குடிநீர், சுகாதாரத் தேவைகள் மட்டுமின்றி கால்நடை மருத்துவத்திலும் அக்கறை காட்டிச் செயலாற்றுகிறார்கள். 'புகையில்லாத அடுப்பு'களை மூன்று லட்சம் பேருக்கு இலவசமாக வழங்கியிருக்கிறார்கள். தவிர ஆலயங்கள், மசூதிகள், கிறிஸ்தவ தேவாலயங்கள் இவற்றின் புனருத்தாரணத்துக்கும் வழிபாட்டுக்கும் கூட சமிதி உதவுகிறது.

அண்மையில் சத்ய சாயி சேவாதளத் தொண்டர்கள் மயிலை கபாலீசுவரர் ஆலயத் திருக்குளத்தில் செடி கொடிகளை அகற்றும் பணியிலும் தங்களை ஈடுபடுத்திக் கொண்டார்கள்.

எல்லாப் பண்டிகை நாட்களிலும் 'சுந்தரம்' சிறப்பு வழிபாடுகளை நடத்துகிறது. தினமும் மாலையில் அரைமணி நேரம் வழிபாடு உண்டு. வியாழன், ஞாயிறுகளில் இது கூடுதல் நேரம் நடைபெறுகிறது. வேத பாராயண வகுப்புகளும், பஜனை வகுப்புகளும் தனியாக நடைபெறுகின்றன.

இவர்கள் முக்கியமாக அக்கறை காட்டுவதில் 'நாராயண சேவை'யும் அடங்கும். ஆதரவற்ற ஏழை எளியவர்களுக்கு அன்னமிடுவதையே இப்படிக் குறிப்பிடுகிறார்கள்.

இலவச மருத்துவ முகாம்கள் நடத்திப் பரிசோதனைகள் செய்து, தொடர் கவனிப்பு, மருத்துவம் செய்வதையும் குறிப்பிட வேண்டும். இலவச 'கார்டியாலஜி' சோதனைகள் செய்து, சிறப்பு கவனிப்புக்காக 520 நோயாளிகளைப் புட்டபர்த்தி மருத்துவமனைக்கு அனுப்பியிருக்கிறார்கள்.

'உங்கள் வீட்டையும் சுற்றுப்புறத்தையும் துப்புரவாக வைத்திருங்கள். அதனால் உங்கள் ஆரோக்கியம் மட்டுமின்றிச் சமுதாயத்தின் ஆரோக்கியமும் ஆனந்தமும் பாதுகாக்கப்படும்' என்பது இந்த சமிதியினரின் பத்துக் கோட்பாடுகளுள் ஒன்று.

சமுதாயத்துக்கு நம்மால் என்ன செய்துவிட முடியும் என்ற எண்ணத்தை மாற்றி நம்மாலும் செய்ய முடியும் என்ற நம்பிக்கையை உருவாக்கி மனம் நிறைவடையப் பண்ணுகிற இடம் சுந்தரம்!

ஸாயிராம்!

– பாலன். பூங்குழலி

# தென்சென்னை எம்.பி. — தன்னம்பிக்கையின் ஒளி!

தென் சென்னை பாராளுமன்ற உறுப்பினர் டாக்டர் ஆர். ஸ்ரீதரனின் (அ.இ.அ.தி.மு.க.) குடும்பமே டாக்டர் குடும்பம். அம்மா, அப்பா, மனைவி, சகோதரன் இப்படி அனைவருமே டாக்டர்கள்.

ஆளைப் பார்த்தால் நிச்சயம் அரசியல்வாதி என்று சொல்லவே முடியாது. முழுக்கைச் சட்டை, பாண்ட், நெற்றியில் லேசான கீற்று குங்குமம். தமிழைவிட ஆங்கிலம் தான் சரளம். தோற்றம் எளிமை; பேச்சு வெளிப்படை.

''ரொம்ப வித்தியாசமான அரசியல்வாதியாக இருக்கிறீர்களே?''

''மக்களின் பிரதிநிதி என்ற பொறுப்பு எனக்குத் தரப்பட்டுள்ளபோது, அந்தப் பதவிக்கு ஏற்றாற்போல நடந்து கொள்ளுவது தானே முறை! அதனால்தான், கட்சிக்காரர்கள் சார்பாக, போலீஸ் ஸ்டேஷன்களுக்கு போன் செய்தோ, நேரே சென்றோ என் பதவியை துஷ்பிரயோகம் செய்வதில்லை. நீங்கள் வேண்டுமானால், சென்னை நகரின் எந்த போலீஸ் ஸ்டேஷனுக்கும் சென்று, இதுவரை எதாவது ஒரு கேஸ் சம்பந்தமாக வாவது நான் சிபாரிசு செய்திருக்கிறேனா என்று விசாரித்துப் பாருங்கள்; அது மாதிரி கேஸ்கள் என்னிடம் வந்தால், 'என்னிடம் வராதீர்கள்' என்று கண்டிப்பாய்க் கூறிவிடுவேன். அரசு ஊழியர்களின் இட மாற்றம், பிரமோஷன் போன்றவற்றுக்கும் சிபாரிசு செய்வதில்லை. இன்னொரு விஷயம், குடித்துவிட்டு யாரும் என் வீட்டுக் காம்பவுண்டுக்குள் நுழைய முடியாது. அதில் நான் ரொம்பவும் கண்டிப்பு!''

இவரது பாராளுமன்றத் தொகுதியில் ஆறு சட்ட மன்றத் தொகுதிகள் உள்ளன. ''அந்தந்தப் பகுதி மக்களின் குறைகளை கவனிப்பதற்காக, ஆங்காங்கே என் அலுவலகங்களைத் திறந்திருக்கிறேன். உள்ளகரம், மேற்கு மாம்பலம், மற்றும் என் வீடு என்று மூன்று அலுவலகங்களிலும் தரப்படும் மனுக்கள், கொண்டு வரப்படும் பிரச்னைகள் குறித்து, உடனடியாக நடவடிக்கை எடுக்கிறேன். வாரம் இருமுறை, என் தொகுதி மக்களின் பிரச்னைகளுக்குத் தீர்வு காண்பது குறித்து மெட்ரோ வாட்டர் சேர்மனுடனும், சென்னை கார்ப்பரேஷனின் தனி அதிகாரியுடனும் ஆலோசனை நடத்துகிறேன். சிறிய பிரச்னைகள் யாவும், சொன்ன பத்து நாட்களுக்குள் தீர்க்கப்பட்டு விடுகின்றன. புற நகர்ப் பகுதியிலுள்ள தொகுதிகளான தாம்பரம் மற்றும் ஆலந்தூர் இரண்டிலும் பல்வேறு விதமான பிரச்னைகள். இவை குறித்து செங்கை - எம்.ஜி.ஆர் மாவட்ட ஆட்சித் தலைவருடன் அவ்வப்போது விரிவாக ஆலோசனை செய்கிறேன்.

''நானே ஒரு டாக்டர் என்பதால், பெரிய ஆபரேஷன்களுக்கு முதலமைச்சர் அல்லது பிரதமரின் நிவாரண நிதியிலிருந்து நிதி உதவி கோரி வரும் மனுதாரர்களை நேரடியாகவே பரிசோதித்து, நோயின் தன்மைக்கேற்ப அரசு மருத்துவமனைக்கு சிகிச்சைக்கு அனுப்பி வைக்கிறேன். தேவையான கேஸ்களை, பிரதமருக்கோ, முதல்வருக்கோ, நிதி உதவி அளிக்கும்படி சிபாரிசு செய்கிறேன். இப்படி சிபாரிசு செய்து பிரதமர் நிவாரண நிதியிலிருந்து பத்துப் பேருக்கும், முதலமைச்சரின் நிவாரண நிதியிலிருந்து நான்கு பேருக்கும் உதவி கிடைத்துள்ளது.''

''உங்கள் தொகுதியின் மேம்பாட்டுக்காக எம்.பி. என்ற முறையில், பாராளுமன்றத்தில் ஏதாவது செய்திருக்கிறீர்களா?''

''நான் தென் சென்னை எம்.பி. ஆனாலும், சென்னை நகரம் முழுவதுமே பயன் பெறக்கூடிய விதத்தில்தான் பணியாற்றிக் கொண்டிருக்கிறேன். சென்னை பீச் முதல் வரையிலான பறக்கும் ரயில் திட்டத்தின் முக்கியத்துவத்தை - உடனடித் தேவையை - வலியுறுத்தி பார்லிமெண்ட்டில் பேசியதன் பயனாக, மத்திய அரசு இதற்கான நிதி ஒதுக்கீட்டை 23 கோடியிலிருந்து 26 கோடி ரூபாயாக அதிகரித்துள்ளது. அதே போல, ராணி மேரி கல்லூரிக்குப் பின்புற முள்ள இடத்தில் பறக்கும் ரயில் திட்டம் சம்பந்தமான எந்தப் பணியும் ஆரம்பிக்கவே யில்லை. காரணம், நில ஆர்ஜிதம் செய்வதில் இருந்த சிக்கல். நான் தலையிட்டு நில ஆர்ஜிதத்தினை முடித்துத் தந்ததில் இப்போது பறக்கும் ரயில் திட்டப்பணி அங்கே ஆரம்பமாகி விட்டது. நான் குறிப்பிட விரும்பும் இன்னொரு முக்கியமான விஷயம், மீட்டர் கேஜ் ரயில் பாதையை, அகல ரயில் பாதையாக மாற்றும் திட்டம்....''



''அதிலே ஒரு சிக்கல் உள்ளது போல இருக்கிறதே! அகல ரயில் பாதை திட்டத்தால், இப்போ துள்ள மாம்பலம் ரயில் நிலைய, கம்ப்யூட்டர் முன்பதிவு கட்டடம் இடிக்கப்படவிருக்கிறது என்கிறார் களே?''

''ஆமாம்! நம் ரயில்வேயின் திட்டமிடுதல் எத்தனை பிரமாத மானது என்பதற்கு இது உதாரணம். முதலில், அயலூர் ரயில்கள் செல்லும் மீட்டர் கேஜ் ரயில் பாதையையே, அகல ரயில் பாதையாய் மாற்றுவதாக இருந் தார்கள். ஆனால் இப்போது அது அப்படியே இருக்க புதிதாக ஒரு அகல ரயில்பாதை அமைக்கத் திட்டம் போட்டிருக்கிறார்கள்.. இதனால்வந்த வினைதான்.''

''மாம்பலத்தில் மேட்லி சாலை, பழவந்தாங்கல் இங்கெல் லாம் ஆரம்பிக்கப்பட்ட சுரங்கப் பாதைகளில் பலமாதங்களாக வேலை தடைப்பட்டுள் ளதே!''

''ரயில்வே, தன்பங்கிற்கான பணியைச் செய்து முடித்துவிட்டது. மாநில அரசு, ரயில் பாதையின் இருபுறங்களிலும் உள்ள பகுதிகளில் சுரங்கப்பாதையைக் கட்ட வேண்டும். ஒரு சிலர், இதற்கு முட்டுக் கட்டையாய் இருக்கிறார்கள். அவர்களுடன் நல்ல விதமாகப் பேசிப் பார்த்தோம். பல வில்லை. கோர்ட்டுக்குப் போய் 'ஸ்டே' வாங்கி வந்து விட்டதால், வேலை தடை பட்டுவிட்டது. எத்தனை காலம்தான் இன் னும் காத்துக் கொண்டிருப்பது? நானே நேரடி நடவடிக்கையில் இறங்கிவிட்டேன். மேட்லி ரோடு பகுதியில் மீண்டும் வேலை ஆரம்பித்துவிட்டது. விரைவில், பழவந் தாங்கல் சுரங்கப் பாதை பணியும் ஆரம்ப மாகிவிடும். இது தவிர, பரங்கிமலை ரயில் நிலையத்தை ஒட்டியும் ஒரு சுரங்கப்பாதை அவசியம். ஏற்கெனவே ஆரம்பித்த சுரங்கப் பாதைகளே இன்னும் கட்டி முடிக்கப் படாத நிலைமையில், இன்னும் ஒரு சுரங் கப்பாதை கட்ட நிதி ஒதுக்கக் கோருவது சரி யாக இருக்காதில்லையா? எனவேதான் சற்று பொறுமையாக இருக்கிறேன்!''

''தாம்பரம் ரயில் நிலையத்தை யொட்டி, மேற்கு தாம்பரம், கிழக்குத் தாம் பரம் இரண்டையும் இணைக்கும் விதமாக ஒரு மேம்பாலம் கட்டினால் போக்குவரத்து தடைபடாமல் இருக்கும் என்பது தாம்பரம் மக்களின் கருத்து. இதற்கு நீங்கள் ஏதாவது செய்யக்கூடாதா?''

''அந்த மேம்பாலத்துக்கு அனுமதி கிடைத்து விட்டது. அடுத்த வருடத்துக்குள் பாலம் தயாராகிவிடும்! மேலும், கிருஷ்ணா நதி நீர் சென்னைக்கு வரும்போது, அந்தத் தண்ணீரை, தாம்பரம், பல்லாவரம் இரு இடங்களுக்கும் வழங்குவதற்கான ஏற்பாடு கள் குறித்து, சம்பந்தப்பட்ட அமைச் சருடன் பேசிக் கொண்டிருக்கிறேன். அதே போல, மேற்கு மாம்பலத்தில் இரண்டு, சூளை மேட்டில் ஒன்று என மூன்று பிரம் மாண்டமான தண்ணீர்த் தொட்டிகள் கட்டு வதற்கான திட்டமும் ஓ.கே. ஆகிவிட்டது. அது நிறைவேறினால் சூளைமேடு மற்றும் மே. மாம்பலவாசிகளின் தண்ணீர்ப் பிரச் னைக்கு நிரந்தரத் தீர்வு கிடைத்துவிடும்.

''சென்னைக்கு வரும் பாலாற்றுத் தண் ணீர், வில்லியம்பாக்கம் என்ற இடத்திலி ருந்து தான் எடுக்கப்படுகிறது. அந்த இடத் தில் அடிக்கடி ஃபியூஸ் ஆகி, மோட்டார் நின்று போகும். இது நெடுநாளைய பிரச்னை. செங்கை - எம்.ஜி.ஆர் மாவட்டக் கலெக்டருடன் இது குறித்து விவாதித்து, இப்போது, பயிற்சி பெற்ற மின் உதவி யாளர்கள் நியமிக்கப்பட்டுள்ளனர்; ஒரு ஜெனரேட்டர் கூட நிறுவப்பட்டுள்ளது.

''இவையெல்லாம் நான் தனியாகச் செய்து வரும் பணிகள். அதே சமயம் தமிழ கத்தின் அனைத்து எம்.பி.க்களும் இணைந்து நான் பங்கேற்றுக் கொண்டு பாராளுமன்றத்தில் பேசிய இரு விஷயங் களில் ஒன்று, காவிரி நீர்ப் பிரச்னை, இன்னொன்று 2,000 கோடி அரோமாடிக் தொழிற்சாலை. இது குறித்து முதல்வர் தலைமையில் சென்ற தமிழக எம்.பி.க்களில் நானும் ஒருவன்'' என்கிறார் டாக்டர் ஸ்ரீதரன்.

சந்திப்பு : எஸ். சந்திரமௌலி

# 14

# முற்றுகை

**கி**ருஷ்ணம்மா ஓடி ஓடி வேலை செய்து கொண்டிருந்தாள். அடுப்பு வேலை ஏறக்குறைய முடிந்து விட்டது.

ரமேஷ"ம் சின்னதுகளும் சாப்பிட்டு விட்டன.

'இந்த ஆள் வந்து சாப்ட்டுட்டா காட்டைப் பாத்து ஓடலாம்' என்று பரபரத்தாள். அவள் 'அவக்தொவக்'கென்று அள்ளி வாயில் போட்டுக் கொண்டாள்.

மிளகாய்ச் செடிக்குள் பருத்தி விதை ஊன்ற வேண்டும். கூலிக்கு ஆள் கிடைப்பது குதிரைக் கொம்பாகி விட்டது.

தீப்பெட்டியாபீஸ் வேலைக்குச் சின்னதுகளும் பெரிககளும் போய் விடுகின்றன. காட்டு வேலைகளுக்கு ஆள் கிடைக்க மாட்டேன் என்கிறது.

தை முடியப் போகிறது. விதை ஊன்றுகிற சம்சாரிகள் எல்லோரும் முடித்து விட்டனர். இயல மாட்டாமல் இளைத்துக் கிடக்கிற ஒன்றிரண்டு சம்சாரிகள்தான் இன்னும் பாக்கி.

விதை வாங்கப் பணம் புரட்டியாக வேண்டும். கூலியாட்கள் கிடைக்க வேண்டும். அவர்களுக்குக் கூலி கொடுப்பதற்கும் பணம் கையில் தயார் பண்ணிக் கொள்ள வேண்டும்.

அடித்துப் பிடித்து இப்போதுதான் பணம் கை வந்து சேர்ந்தது. விதை வாங்கியாகி விட்டது. இன்றைக்குத்தான் இறவைப் பங்கு. மிளகாய்ச் செடிக்குள் நீரைப் பாய்ச்சிக் கொண்டே விதை ஊன்ற வேண்டும்.

விதையை நேற்றே வாங்கியாகி விட்டது. விடிந்ததும், சாணம் அள்ளி விதையில் போட்டு நீரைத் தெளித்துப் பிசைந்து, உருட்டி, புரட்டி உலரப் போட்டாகி விட்டது.

இன்னும் இவரைக் காணலியே...

**வ**ந்து நின்றான் நாராயணசாமி. ஓடைக்குப் போய் விட்டு வந்திருக்கிறான். பல்லில் வேப்பங்குச்சி. அவன் கடித்துக் கடித்து நுனி நைந்திருக்கிறது.

''எங்க போவிக...? நேரமாகுதுல்லே?''

''ஆகுது. ஆகுது. சரி, ஆள்கள்ல்லாம் வர்றாங்களா?''

''இப்பப் பெறப்பட்டுருவாக.''

''சரி... சோத்தை வை.''

வேப்பங்குச்சியை விருட் விருட்டென்று தேய்த்து விட்டு எறிந்தான்.



வாயைக் கொப்பளித்தான். பல்லின் இடுக்குகளிலிருந்த குச்சியின் இணுக்குகளைத் தேடித் தேடித் துப்பினான்.

அடுப்பங்கரைக்குள்ளிருந்து அசரீரியாய் அங்கலாய்ப்புச் சப்தம். ''ஊர்லே உள்ள சம்சாரிகளெல்லாம் பருத்தி விதை ஊன, முளைச்சிடுச்சு. சில பேருக்குச் செடியாவே ஆயிருச்சு. நாம இன்னிக்கு ஊனப் போறோம்... பருவம் பிந்தினா, வெள்ளாமையும் அப்படித்தான் இருக்கும்.''

''இன்னைக்காச்சும் ஊன முடிஞ்சிருக்கேன்னு சந்தோஷப்படு.''

''சரி... சாப்பிடுங்க... ரமேஷையும் கூட்டிக்கிட்டு அம்மா ஊருக்குப் போனீகளே... என்ன ஜோலியா போனீக...?''

''சும்மா... பாத்துட்டு வரத்தான்.''

''சொர்ணம் கல்யாண விஷயமா ஏதுவும் பேசனீகளா?''

''என்னத்தைப் பேச? பேசறதுக்கு என்ன இருக்கு?''

''வீட்டுக்கு மூத்த மாப்பிள்ளை நீங்க. இப்படி விட்டேத்தியாப் பேசனா... எப்புடி?''

''கிட்ணம்மா... இங்க கிடக்குற வேலையைப் பாரு. அதைப் பத்தி ஆற அமரப் பேசலாம்.''

அவன் பேச்சை நறுக்கிய விதத்தில் ஒரு வெறுப்பு தெரிகிறது. புருஷனின் முன் வழுக்கையைப் பார்க்கிறாள் கிட்ணம்மா. அசையும் தாடை, அகலமான கேரா.



இவனது கேள்வி குடையும் பார்வையை வேண்டுமென்றே தவிர்த்தவனைப் போல... நிமிராமல் சாப்பிட்டான்.

முகம் கொடுக்காமல் வெறுப்புடன் பேசிய வேலாயியின் முகம் ஞாபகத்துக்கு வந்தது. ஒருவேளை... சொர்ணத்தை ரெண்டாந்தாரமாகக் கட்டிக் கொள்ள ஆசைப்படுவது பெட்டைம்மாளுக்குத் தெரிந்தால்... என்ன செய்வாள்? ஆத்திரப்படுவாளா? அழுது புலம்புவாளா? ஆர்ப்பாட்டம் செய்வாளா? அப்புறம் மெள்ள மெள்ள அடங்கிப் போவாளா?..

சொர்ணம் சம்மதிப்பாளா? ஒரேயடியாக மறுத்து விட்டால்...?

அதற்குத்தான் வேலாயி அக்காவின் ஒத்துழைப்பு வேண்டும்... 'ஒரு வார்த்தையைக் காதில் போட்டு வைப்போம்...' என்று வீடு போனால்... முகத்தை ஒரேயடியாகத் தூக்கி வைத்துக் கொள்கிறார்களே... இன்னும் பழைய நினைப்பு. ஜமீன்தார் பொண்டாட்டி என்கிற நினைப்பு. கஞ்சிக்குச் செத்த கிழட்டுக் கழுதை. நாதியத்த நாய்... நெனைப்பு மட்டும் உசரத்துலே. உச்சியிலே இருக்கட்டும்... இருக்கட்டும்... பார்த்துக்கிடுறேன்...

சாப்பிட்டுக் கொண்டேயிருந்தான். விக்கலுக்குத் தண்ணீரைக் குடித்தான். எரியும் மனசைத் தண்ணீர் தணிக்கவில்லை. எரிவதை வெளிக்காட்டவும் முடியாது.

**சா**ப்பிட்டு முடித்துக் கை கழுவித் துடைத்த நாராயணசாமி ஏதோ 'கசமுசா' சப்தம் கேட்கிறதே என்று வெளியே எட்டிப் பார்த்தான். வீதியில் மனிதர்கள் இயல்புக்கு மாறான பரபரப்பாய்....

என்ன நடந்து போச்சு...?

''ஏய்... என்னப்பா, எல்லாரும் போறாக, என்ன விஷயம்?''

''நம்ம வேலய்யா தாத்தா மண்டையைப் போட்டுட்டாரு.''

''வேலய்யா தாத்தாவா? எப்ப?''

''மூணுநாளா இழுத்துக்கிட்டுக் கெடந்தாம். காலையிலே கட்டிலை விட்டுக் கீழே இறக்கிப் போடலாம்னு தூக்கப் போயிருக்காக. ஆளு உசுரு போய்க் கெடந்துருக்காரு.''

''அடப் பாவமே...!''

அவனுக்குள் பேரதிர்ச்சி. கண் மூக்குத் தெரியாமல் கோபம் வந்தது. 'ச்சே... சாகுறதுக்கு இந்தத் தேதிதான் கெடைச்சதாக்கும்?'

கிழடு செத்ததைப் பற்றிக் கூட கவலையில்லை. இன்று செத்ததுதான் நஷ்டம். வேலை நஷ்டம். ஏற்கெனவே விதை ஊன்றுவதில் தாமதம். இன்னைக்கும் சாவுத் தடை.

இன்றைக்கு யாரும் வேலைக்குப் போக முடியாது. போயிருந்தாலும் திரும்பி விட வேண்டும். பிரேதத்தை வீட்டில் போட்டு விட்டு யாரும் வேலைக்குப் போக முடியாது. இது ஊர்க் கட்டுமானம்.

''சரி... சரி.. சாணிப் பால்லே உருட்டிக் காய வைச்ச விதையை அள்ளி வை. நாளைக்குப் பாப்போம்...''

''இப்ப வாரேன்னு சொன்ன ஆளுகளை என்ன செய்ய?''

''சரி.. போய்ச் சொல்லு. 'இந்த மாதிரியாயிப் போச்சு'ன்னு. நாளைக்கு இதே ஆளுக வரட்டும்.''

**து**ண்டை எடுத்துத் தோளில் போட்டுக் கொண்டு நாராயணசாமி மேற்குத் தெருவில் நடந்தான்.

டீக்கடையை நெருங்கினான். யாரும் வேலைக்குப் போகாததால், ஊர் ஜனம் முழுவதும் டீக் கடையில் அடைத்து கிடந்தது. உட்கார இடமில்லாமல் ஒரே கூட்டம்.

காலை எட்டு மணியிருக்கும். வந்த பேப்பர் கசங்கிப் போய் விட்டது. அத்தனை பேர் அதைப் போட்டுப் பிளந்து பிளந்து புரட்டியிருக்கிறார்கள்.

தின்னைச் சாய்ப்புதான். மேற்குப் பக்கம் ஒரு கட்டைச் சுவர். ஈ மொய்த்த மாதிரி வரிசையாகச் சாய்ந்திருக்கிற மனிதர்கள்.

இவனும் ஓர் இடத்தில் உட்காரலாமா என்று யோசித்து நடுவில் நின்றான். இடமில்லை.

அதற்குள் டீக்கடைக்காரர் சப்தம் போட்டார்.

''யாரது? நிக்காதீக. உக்காருங்க. டீயடிக்க முடியலே.''

''எடமில்லே.''

''மனசிருந்தா எடமிருக்கும். சும்மா உக்காருங்க.''

''சரியப்பா... சீக்கிரமா ஒரு டீ குடப்பா.''

எப்படியோ ஓர் இடம் கிடைத்து, அதில் தன்னைச் சொருகிக் கொண்டான், நாராயணசாமி.



''காணாமல் போன உன் மனைவியை ஃபோட்டோ போட்டுப் பத்திரிகைகளில் கால் பக்கம் விளம்பரம் கொடுத்தாயே! கிடைத்து விட்டாளா?''

''பத்திரிகைகளில் முழுப் பக்க விளம்பரம் கொடுத்தால்தான் திரும்பி வருவேன்னு லெட்டர் போட்டிருக்கா!''

- நெல்லை வி. சிவா

பக்கத்தில் இடம் ஒதுக்கித் தந்தவர் கிண்டலாகக் கேட்டார். ''சீக்கிரமா குடிச்சிட்டு எங்க பொறப்பட்டுட்டே...?''

அதற்குள் இன்னொருவர் குறுக்கிட்டார்.

''வேலய்யா தாத்தாவோட போட்டி போட்டு, எங்க போகச் சொல்லுறே? மயானக் கரைக்கா?''

''அப்ப... நாராயணசாமியைச் சாகச் சொல்றே?''

''ஏன், சாகக் கூடாதா? தாத்தா தான் சாகணும். நாம எல்லாம் இருக்கப் போறோமாக்கும்? சாவு யாருக்கும் வரும். எந்த வயசிலேயும் வரும்.''



''சாலையில் படுத்து மறியல் செய்யப் போன நம்ம தலைவர், ஏன் விழுந்தடிச்சி ஓடி வரார்?''

''தார் ரோடு சூடு தாங்க முடியலையாம்!''

- க. சந்தானம்

''வரட்டும். ஆனா... நம்ம நாராயணசாமி நல்லவனப்பா. இன்னும் கொஞ்ச நாளைக்கு இருக்கட்டும்.''

''இருந்து இந்தப் பூமியிலே என்னத்தை அனுபவிக்கப் போறோம்? துன்பத்தையும் தொல்லையையும்தானே?''

''அதுக்காக மூணு புள்ளைக பொண்டாட்டிகளை விட்டுட்டு நாராயணசாமி எதுக்குச் சாகணும்? இன்னொரு கல்யாணம் கூட செய்வானே, அவன்.''

''இன்னொரு கலியாணமா? இந்த ஆளுக்கா? நல்ல கூத்துத்தான்.''

''ஏன்? செய்யக் கூடாதா? வயசு போச்சா?''

''நாப்பதுக்கு மேலே வயசு. நீட்டுக்கல் மாதிரி தலை 'வழுவழு'ன்னு கண்ணாடி மாதிரி இருக்கு. மொகம் பாக்கலாம். மூஞ்சி முகரையெல்லாம் நரைச்சிருக்க. இனிமே கல்யாணமா? நல்லதுதான்; போங்க!''

''ஏய்... என்ன இப்படிச் சிரிக்கே? நரைச்சா என்ன? ஆம்பிளைச் சிங்கம். அம்பது வயசுலே கூட மணவறையிலே உக்காரலாம். அவன் கொழுந்தியாள் ஊர்லே இருக்கா. சொர்ணச் சிலை மாதிரி. வந்து உக்காருன்னா... உக்காந்துட்டுப் போறா... பொண்டாட்டிக்குப் பொண்டாட்டியாத் துணையா வைச்சிரலாம். சொத்தோட சொத்தாச் சேந்து போகும். அப்புறம், நாராயணசாமியைப் பிடிக்க முடியுமா? ஊர்லே 'மேல் கை'யான சம்சாரியாயிருவான்.''

அதற்குள் ஒரு பெரியவர் குறுக்கிட்டு... எல்லாரையும் சப்தம் போட்டு அடக்கினார். அதுவும் கேலிதான்...

''ஏய்... கம்மாயிருங்கப்பா. நீங்கதான் அவனைச் சுத்தி கும்மியடிக்கப் பேசுறீங்க. அவன் வாயையே திறக்கலியே...''

''வாயைத் திறந்துதான் பேசணுமா? நாராயணசாமி பெரிய எம்டன்னாச்சே! ஊமையாகவே பேசுவானப்பா. அங்கே பாரு... அவனுக்குச் சிரிப்பாணியைத் தாங்க முடியலே. பூரிக்கப் போய்ச் சிரிக்கான். அந்தச் சிரிப்பு பேசாத பேச்சா, ஒலகத்துலே இருக்கு?''

நாராயணசாமி நமுட்டுச் சிரிப்பாகச் சிரித்துக் கொண்டே டீயைக் குடித்தான். ஒன்றும் பேசவில்லை. ஆனாலும் உள்ளுக்குள் ஒரு பூரிப்பு. புளகாங்கிதம். மகிழ்ச்சி. அத்துடன் வியப்பும் கூட.

சொர்ணத்தை ரெண்டாந்தாரமாகக் கட்டிக் கொள்வதன் மூலம், அவள் சொத்தையும் வளைத்துப் போட்டு... முழுச் சம்சாரியாக தலையெடுக்க வேண்டும் என்று, அவன் ரகசியமாக மனசுக்குள் ஒரு முடிச்சுப் போட்டு வைத்திருக்கிறான்.

அந்தப் பொட்டலத்தை இன்னும் ஒரு ஜீவனிடம் கூட அவிழ்த்துக் காட்டியதேயில்லை. கிருஷ்ணம்மாளுக்குக் கூட இன்னும் தெரியாது.

அதற்குள் இந்தப் பாவிகளுக்கு எப்படித் தெரிந்தது? தெரிந்தது போல கதை பின்னிப் பேசுகிறார்களே... அவனது மன ரகசியத்தையே அளந்து முடித்தவர்கள் மாதிரி! உலை வாயை மூடினாலும் ஊர் வாயை மூட முடியாது என்பது இதுதானா? தன்னை மாதிரியே நின்று யோசித்துப் பார்த்து... அள்ளி விடுகிறார்களோ...?

குருட்டாம்போக்கில் கல்லெறிந்து பார்க்கிறார்களோ...?

இதற்கு நான் ஏதாவது பதில் சொல்லப் போய்... அதிலேயே தனது 'வாய் இழப்பை' வாங்கிக் கொண்டு... யூகத்தை உண்மையாக்கி விடுவார்களோ?

உள்மன ரகசியம் வாய் வழியாக எங்கேனும் கசிந்து விடுமோ...? கசிவிலேயே உள்கிடக்கையை உறுதிப்படுத்தி விடுவார்களோ...!

கிராமத்து ஜனங்கள் எமகாதகர்கள்!

டீ கிளாஸைத் தந்து விட்டு... யாருக்கும் எந்தப் பதிலும் சொல்லாமல்... எழுந்து இழவு வீட்டை நோக்கி இவன் பயணப்பட...

இவனது முதுகுக்குப் பின்னால் டீக்கடை மொத்தமும் கூச்சமில்லாமல் கலகலத்துச் சிரித்தது.

(தொடரும்)



# அவர்களை அப்படியே விட்டு விடு

**கா**லையில் ராஜகோபாலனின் வீடு போர்க்களமாகக் காட்சியளித்தது. பழங்கால தமிழ் நாட்டுப் பெண்கள் புலியை முறத்தால் விரட்டுமளவுக்கு வீரம் கொண்டிருந்தனர் என்றும், இப்பொழுது தமிழ்ப் பெண்களுக்கு வீரமில்லை என்பதும் எவ்வளவு அபத்தம் என்பது ராஜகோபாலனின் மனைவியைப் பார்த்தால் தெரியும்!

அமுதாவின் கையில் வாளும் கேடயமும் இல்லை அவ்வளவுதான் - மற்றபடி அவள் சமையலறையிலிருந்து ஹாலுக்குக் கணவனுக்கு காப்பி கொடுக்க ஓடுவதிலும், அங்கிருந்து வராந்தாவில் பேப்பர் படித்துக் கொண்டிருந்த அப்பாவை குளிக்கக் கூப்பிட்ட சப்தமான குரலிலும், அங்கிருந்து மொட்டை மாடிக்குத் தாவி ஏறி, படிக்கிறேன் என்று சொல்லிக் கொண்டு ஜப்பான் குஸ்தி போட்டுக் கொண்டிருந்த குழந்தைகளை விலக்கிச் சமாதானப்படுத்திய வாகவத்திலும் - ஒரு நுட்பமான போர் வீரனின் குணாதிசயங்கள் தெரிந்தன.

ஏழுக்கு முதல் வண்டி - அதாவது - ராஜகோபாலன் - கிளம்பியது. ஏழரைக்கு பஸ்ஸை பிடித்தால்தான் பெரியகுளத்திற்கு 'பாங்'கிற்கு நேரத்தில் போய்ச் சேர முடியும். எட்டு மணிக்கு இரண்டாவது வண்டி குழந்தைகள். அவர்களைக் கிளப்புவதற்குள் அமுதா பட்ட பாடு! அவளுடைய தந்தை வீரகுமரேசன், மகள் படும்பாட்டைப் பரிதாபமாகப் பார்த்தார்.

அவள் சொல்வதைக் குழந்தைகள் சட்டை செய்த மாதிரியே தெரியவில்லை. குளிக்க மாட்டேன் என்று சொன்ன மகனை தாஜா பண்ணிக் குளிக்க வைத்தாள். அவனைத் துவட்டி விட்டு மகளைத் தேடும் போது, அவன் மறுபடியும் தலைக்குத் தண்ணீர் விட்டுக் கொண்டிருந்தான். அவனுக்குப் பச்சைத் தண்ணீர் ஆகாது. இந்த லட்சணத்தில் தலைக்கு ஊற்றிக் கொள்வதென்றால்...'

இனி நிச்சயம் மாலை அவன் டாக்டரிடம் அழைத்துச் செல்ல வேண்டியிருக்கும். கணவன் வர எட்டு மணியாகி விடும். அவள் தான் ஓட வேண்டும். கோபம் மேலிட முதுகில் பளார் என்று ஒன்று வைத்தாள். அவன் இதுதான் சாக்கென்று பள்ளிக்கூடம் போக மாட்டேன் என்று அடம்பிடிக்க ஆரம்பித்தான்.

அவனைச் சமாதானப்படுத்தி முடிக்கும் போது மகள் யுத்தத்தை ஆரம்பித்தாள். அவளுக்காக வைத்த பூ நீளம் குறைவாம் - பூ தலையிலிருந்து இடுப்பு வரைக்கும் வரணுமாம். இப்போது பூவுக்கு அமுதா எங்கே போவாள்?

''கண்ணில்லே... நான் சாயங்காலம் வரும் போது நல்ல பூவாக் கொண்டு வர்றேன். இது சரியில்லே... நீளமா வச்சா உனக்கு நல்லாருக்காது..''

மகள் ஓரளவு சமாதானமடைந்தாள். எல்லாம் ரெடியாகும் போது மகன் காப்பியைச் சட்டையில் கொட்டிக் கொண்டான். அவனுக்கு வேறு உடை மாற்றும் போது ஆட்டோ வந்து விட்டது. ஆட்டோ வரும் போது தயாராக இருக்க வேண்டும். இல்லையென்றால் அவன் போய் விடுவான். அவள் அப்பாவிடம் சொல்லி ஆட்டோவைத் தாமதப்படுத்தினாள். ஒரு வழியாகக் குழந்தைகள் ஆட்டோவில் ஏறினர்.

**ம**ணியைப் பார்த்தாள் - எட்டு பத்து! அவள் கிளம்புவதற்கு இன்னும் நாற்பது நிமிடங்கள் இருந்தன. அதற்குள் துணி துவைத்து, குளித்து, பக்கத்துத் தெருவில் இருந்த ஆபீஸ் தோழி லீவ் லெட்டர் கொண்டு வர, அவளைச் சிரித்த முகத்துடன் வரவேற்று, டப்பாவில் ஏதோ கொஞ்சம் அடைத்து வைத்துக் கொண்டு கிளம்ப - ஒன்பது மணி ஆகி விட்டது.

பக்கத்துத் தெருவில் இருந்த பஸ் ஸ்டாப்பில் பஸ் இப்பொழுது போயிருக்கும். மூன்று தெருக்கள் தள்ளியிருந்த பஸ் ஸ்டாண்டுக்குப் பதினைந்து நிமிடங்கள் நடந்து சென்று பஸ் ஏற வேண்டும்.

பஸ்ஸில் போகும் போது அமுதா தன்னுடைய நிலையை நினைத்துப் பரிதாபப் பட்டாள். குழந்தைகளை நினைக்கும் போது கோபமாக வந்தது. அமுதா சிறு வயதில் எவ்வளவு நல்ல பிள்ளையாக இருந்தாள்! தன்னுடைய பெற்றோருக்கு ஒரு சிரமமும் கொடுத்ததில்லை. சொன்ன பேச்சைக் கேட்பாள். அந்த மாதிரி அவளுடைய குழந்தைகள் இருந்தால் இந்த அவசர யுகத்தில் எவ்வளவு நன்றாக இருக்கும்!

**மா**லை வந்ததும் எல்லோருக்கும் டிஃபன் செய்து கொடுத்து விட்டுக் குழந்தைகளுக்கு டியூஷன் எடுக்க ஆரம்பித்தாள். இருவருமே பாடத்தில் கவனம் செலுத்தாமல் விளையாட்டாய் இருக்க, அமுதாவுக்குத் தாங்க முடியாமல் கோபம் வந்தது.

இருவரும் புரோகரஸ் கார்டு கொண்டு வந்திருந்தனர். மிகக் குறைந்த மார்க்கைப் பார்த்ததும் அவளுக்குப் பகீரென்றது. எவ்வளவு கஷ்டப்பட்டு சொல்லிக் கொடுத்திருந்தாள். இப்படிப் பொறுப்பில்லாமல் இருக்கிறார்களே!

அன்று அலுவலகத்திலும் ஆபீஸரிடம் அமுதா திட்டு வாங்கியிருந்தாள் - தாமதமாகப் போனதற்கு. எல்லாம் சேர்ந்து கொண்டது. கோபம் தலைக்கு ஏறியது. பென்சிலுக்காகச் சண்டை போட்ட இரண்டு குழந்தைகளையும் இழுத்து



நன்றாக அடிக்க ஆரம்பித்தாள். வீரகும ரேசன் வந்து தடுத்தார்.

''என்னம்மா... இப்படிப் போட்டு அடிக்கிறே...?''

''பின்னே என்னப்பா! காலையிலிருந்து நீங்களும் பார்த்துக்கிட்டுத்தானே இருக்கீங்க? சொன்னால் ஒரு வார்த்தையாவது கேக்குறாங்களா? அதெல்லாம் போகட்டும். பரீட்சையிலாவது நல்ல மார்க் வாங்கலாமில்லே? உங்களுக்கெல்லாம் நல்லாத் தெரியுமில்லே. நான் எவ்வளவு அடக்கமா இருந்தேன். சின்ன வயசிலே உங்களை எதிர்த்து ஒரு வார்த்தையாவது பேசியிருப்பேனா..? இதுக எவ்வளவு தூரம் என்னைப் படுத்துது! உங்க மாப்பிள்ளையும் சாதுவான டைப்தான்... எங்களுக்கு எப்படிப்பா இப்படி கொழந்தைங்க பிறந்தது..?''

வீரகுமரேசன் அவளைப் பார்த்துச் சிரித்தார்.

''சிரிக்காதீங்கப்பா... எனக்கு கோபமா வருது...''

''சாரிம்மா... ஏதோ ஞாபகத்திலே சிரிச்சுட்டேன்... நீ உன்னையும்... உன்னைச் சுத்தி இருக்கிற உலகத்தையும் சரியாகப் புரிஞ்சுக்கல்லேம்மா... அதுதான் உன் கோபத்துக்குக் காரணம்...''

''என்னப்பா சொல்றீங்க...?''

''ஆமாம்மா... நாங்க அந்தக் காலத்திலே வாழ்ந்த வாழ்க்கை ஆர்ப்பாட்டமில்லாத, திருப்தியான வாழ்க்கை.. அந்த மனநிலையிலே பிறந்த நீங்களும் அமைதியாக இருந்தீங்க... ஆனால் இப்போ உங்க வாழ்க்கை பரபரப்பா இருக்கு.. உங்களைச் சுத்தி எண்ணற்ற அநியாயங்கள் நடக்குதுன்னு நீங்க நினைக்கிறீங்க... பஸ்ஸிலே உன்னை இடிச்சிட்டுப் போறான்... வெயில் காலத்திலே எப்படி நீங்க தண்ணிக்காக ஆலாப் பறக்கிறீங்க? யாரும் அதுக்காக ஒண்ணும் செய்யக் காணோம்... போஸ்டர்லே பெண்களை அவமானப்படுத்துறாங்க. இப்படி எத்தனையோ. இதையெல்லாம் எதிர்க்கிற மனநிலை இருக்கு... ஆனா ஒண்ணும் செய்ய முடியல்லே என்கிற தோல்வி உணர்ச்சி. இந்தச் சூழ்நிலையிலே பிறக்கிற குழந்தைகளும் மனக்குமுறலோடு இருக்கு. இனம் பிரிக்க எதிர்க்கிறதுக்குத் தெரியல்லே... அதனாலே அம்மா பேச்சைக் கேக்க மாட்டேங்கிறான். அக்கா தம்பியை, தம்பி அண்ணனை - காரணமில்லாமெ அடிக்குது... உங்கிட்டே இருக்கிற ஒரு மனக் கலக்கம் அவங்கிட்டேயும் தங்கியிருக்கு.. அதனாலே 'ரெஸ்ட்லெஸ்ஸா' இருக்கு... இதைப் புரிஞ்சுக்கிட்டா குழந்தைகளை நீ அடிக்க மாட்டே... அவங்களைத் திருத்தறதுக்கு என்ன வழின்னு யோசிக்க ஆரம்பிப்பே...''

அமுதா குழந்தைகளைக் கனிவுடன் பார்த்தாள்.



* செஸ் போட்டியில் ஆர்த்தி - விஜயலக்ஷ்மி

# ஹோம் ஒர்க்கை மற; சுதந்திரமாய்ப் பற!

பள்ளி பாடத் திட்டத்தின் சுமை குழந்தைகளை எப்படி அழுத்துகிறது என்பது அவர்கள் முதுகைப் பார்த்தால் தெரியும். நகரங்களில் இடநெருக்கடி பிரச்னையோ அவர்கள் சுத்தமான காற்றைக் கூட சுவாசிக்க முடியாமல் செய்கிறது.

இந்த இரண்டிலிருந்து அன்றாடம் சற்று நேரமேனும் விடுதலை பெற்று அவர்கள் மகிழ வாய்ப்பளிக்கிறது குழந்தைகள் சங்கம். "சில்ட்ரன்ஸ் கிளப்" என்றே பிரபலமாக அழைக்கப்படும் இச்சங்கம், குழந்தைகளின் உற்சாக விளையாட்டுக்கும் பொது அறிவின் இயல்பான வளர்ச்சிக்கும் களம் அமைத்துத் தருகிறது.

மயிலாப்பூர் பகுதியில் பிறந்து வளர்ந்த பிரமுகர்கள் சிலர், தங்களுக்குப் பிறகு வரும் தலைமுறைக் குழந்தைகளுக்காக தீர்க்கதரிசனத்துடன் தொடங்கியதுதான் இச் சங்கம். குழந்தைகளின் சுதந்திரத்தையும் கருதித்தான் இந்தியாவின் முதல் சுதந்திர தினத்தைக் குழந்தைகளுடன் சேர்ந்து கொண்டாடிய போது, இந்த கிளப்புக்கு வித்திடப்பட்டது. வித்திட்டவர்கள் : சாவித்ரி ஸ்ரீநிவாஸன், டி. ஆர். வெங்கட்ராம சாஸ்திரி.

இந்த கிளப்பில் உறுப்பினராவதற்குப் பதிவுக் கட்டணம் பத்து ரூபாய் மட்டுமே. மூன்று மாதங்களுக்கு ஒருமுறை பதினைந்து ரூபாய் சந்தா தொகை வசூலிக்கிறார்கள். வசதிக் குறைவான வீட்டுக் குழந்தைகளுக்குக் கட்டணத்தில் சலுகை காட்டுகிறார்கள்.

செஸ், கிரிக்கெட், டேபிள் டென்னிஸ் ஆகிய மூன்று விளையாட்டுகளுள் ஏதேனும் ஒன்றில் குழந்தைகள் கட்டாயம் பயிற்சி பெற வேண்டும். கிரிக்கெட் : ஆசைத்தம்பி; டேபிள் டென்னிஸ் : வித்யாசாகர்; செஸ் : காமேஸ்வரன் என முன்னணி பயிற்சியாளர்கள் குழந்தைகளுக்குக் கவனமுடன் பயிற்றுவிக்கிறார்கள்.

ஆண்டுதோறும் இந்த விளையாட்டுகளில் போட்டி வைப்பதோடு ஓவியப் போட்டி, மாறுவேடப் போட்டி போன்றவற்றையும் வைத்துப் பரிசளிக்கிறார்கள். (ஓவிய வகுப்புகளும் நடத்தப்படுகின்றன)

சில்ட்ரன்ஸ் கிளப் நடவடிக்கைகளுள் மிகச் சிறப்பானதாகக் குறிப்பிடப்பட வேண்டியது கடந்த ஐந்து வருடங்களாக அவர்கள் நடத்தி வரும் 'சயன்ஸ் புரோக்ராம்'.

ஐ. ஐ. டி., மாட்சயின்ஸ், ஸ்பிக் ஸயன்ஸ் ஃபவுண்டேஷன் போன்ற ஸ்தாபனங்களின் உதவியுடன் குழந்தைகளுக்கு விஞ்ஞான, கணித விரிவுரைகள் நடத்துவதோடு, விஞ்ஞானிகளையும் ஆராய்ச்சியாளர்களையும் அவர்கள் நேரில் சந்திக்க வாய்ப்பு ஏற்படுத்தித் தரப்படுகிறது. ஆய்வுக் கூடங்களுக்கே குழந்தைகளை நேரில் அழைத்துச் சென்று காட்டி விளக்கங்கள் அளிக்க ஏற்பாடுகள் செய்கிறார்கள். இந்த 'சயன்ஸ் புரோகிராமு'க்குக் குழந்தைகளிடையே நல்ல வரவேற்பு கிடைக்கிறது.

அறுபதுகளில் வாங்கிய ஆறரை கிரவுண்ட் நிலத்தில் கலையுலகப் பிரமுகர்களின் உதவியுடன் கட்டடம் எழுப்பப்பட்டது. இன்று தென் சென்னைக் குழந்தைகள் விளையாட விஸ்தாரமான மைதானமும் அவர்களது கலைத் திறமைகளை வெளிப்படுத்தவும் புதியவை கற்கவும் அழகிய அரங்கமும் வி. எம். சாலையில் உள்ளன.

சில்ட்ரன்ஸ் கிளப்பின் தற்போதைய தலைவர் கே. வி. ராமனாதன்; துணைத் தலைவர்கள் பட்டு பாலகோபால், வி.எஸ். சங்கர், ஏ. சிவசைலம்; செயலாளர் எம். நாராயணசாமி ஆகிய அனைவரும் மயிலைப் பகுதியில் விளையாடி வளர்ந்தவர்கள். பெற்றோர்கள், பிள்ளைகள் பள்ளியிலிருந்து திரும்பியதுமே, "ஹோம்ஒர்க், ஹோம்ஒர்க்" என்று விரட்டாமல், "சில்ட்ரன்ஸ் கிளப், சில்ட்ரன்ஸ் கிளப்" என்று அனுப்பி வைத்தால் நன்றாயிருக்கும்.

– பானுமதி ராமச்சந்திரன்

# போலீஸ் ஸ்டேஷனில் கற்பழிப்பு!

கிழக்குக் கல்கத்தாவிலுள்ள பூல்பாகான் போலீஸ் ஸ்டேஷனில் ஒரு நடைபாதைவாசிப் பெண் கற்பழிக்கப்பட்ட நிகழ்ச்சி நகரத்தில் பெரும் அதிர்ச்சியை உண்டாக்கியிருக்கிறது. இதில் சம்பந்தப்பட்டுள்ள ஆறு போலீஸ்காரர்கள் தாற்காலிக வேலை நீக்கம் செய்யப்பட்டுள்ளனர். இந்த நிகழ்ச்சியை விசாரிக்க ஓய்வு பெற்ற உயர்நீதிமன்ற நீதிபதியொருவர் நியமிக்கப்பட்டுள்ளார். அரசியல் ரீதியாக இந்த நிகழ்ச்சியைப் பயன்படுத்திக் கொள்ளக் காங்கிரஸ் தவறவில்லை. மத்திய மந்திரி மமதாபானர்ஜி டில்லியிலிருந்து கல்கத்தாவுக்குப் பறந்து வந்து அரசாங்கத்துக்கெதிராக ஆர்ப்பாட்டம் நடத்தினார். ஒரு காங்கிரஸ் எம். எல்.ஏ. ஒரு கன்றுக் குட்டியையும் ஓர் ஆட்டுக் குட்டியையும் பிடித்து வந்து பூல்பாகான் போலீஸ் ஸ்டேஷன் அதிகாரியின் மேஜையின் மேல் போட்டார். போலீஸ்காரர்கள் கையில் மக்கள் ஆட்டுக் குட்டிகள், கன்றுக் குட்டிகள் என்பதைக் காட்டவாம்.

துர்கா பூஜை விழாவில் ஒரு பந்தலில் பூல்பாகான் கற்பழிப்பு நிகழ்ச்சியைப் பொம்மைகளால் காட்சிப் பொருளாக்கியிருந்தார்கள். அந்தப் பொம்மைகளைப் போலீஸ் பறிமுதல் செய்யவே அதை எதிர்த்து ஆர்ப்பாட்டங்கள் நடந்தன. புதிய பொம்மைகளைக் கொண்டு மறுபடி கற்பழிப்பு நிகழ்ச்சி அமைக்கப்பட்டது. மறுபடி கலவரம் ஏற்படும் என்று பயந்து போலீசார் அதைக் கண்டுகொள்ளாமல் இருந்து விட்டனர்!

## பெட்ரோல் விலையுயர்வின் எதிரொலிகள்

பெட்ரோல், டீசல், சமையல் காஸ் விலையுயர்வை எதிர்த்து ஒருநாள் மேற்கு வங்காள பந்த் நடைபெற்றது. இடதுசாரிக் கட்சிகள் நடத்திய இந்த ஹர்த்தாலைக் காங்கிரஸ் எதிர்க்கத் துணியவில்லை.

இதன் பிறகு தனியார் துறையில் பஸ், மினி பஸ், டாக்சிக் கட்டண உயர்வு கோரி ஒரு நாள் வேலை நிறுத்தம் நடந்தது. மக்கள் பட்ட அவதி கொஞ்ச நஞ்சமில்லை. மெட்ரோ, டிராம்கள், சர்க்கார் பஸ்கள் இவற்றால் போக்குவரத்தைச் சமாளிக்க இயலவில்லை.

கோரிக்கைக்கு விட்டுக் கொடுத்து அரசாங்கம் கட்டணங்களை ஓரளவு உயர்த்த அனுமதித்துள்ளது. ஆனால் இது போதாதென்று பஸ் முதலாளிகளில் ஒரு சாரார் கிளர்ச்சி செய்கிறார்கள். ஆனால் அவர்களது மிரட்டல் பலனளிக்கும் என்று தோன்றவில்லை.

## வித்தியாசாகர் பாலம்

கல்கத்தாவையும் ஹௌராவையும் இணைக்கும் இரண்டாவது தொங்கு பாலத்தை நமது பிரதம மந்திரி அக்டோபர் 10ம் தேதியன்று திறந்து வைத்தார். இதற்கு 'வித்தியாசாகர் சேது' என்று பெயரிடப்பட்டுள்ளது. ஏற்கெனவேயுள்ள ஹௌரா பாலத்துக்கு 'ரவீந்திர சேது' என்று பெயர். 823 மீட்டர் நீளமுள்ள இந்தப் பாலம் நீளத்தைப் பொறுத்த வரை இவ்வகைப் பாலங்களில் உலகத்திலேயே மூன்றாவது இடத்தைப் பெற்றாலும் நவீன தொழில் நுட்பத்தில் முதலிடம் பெறுகிறது. 1972-ம் ஆண்டில் இந்திரா காந்தியால் அடிக்கல் நாட்டப் பெற்ற இப்பாலம் உருப்பெற 20 ஆண்டுகள் பிடித்துள்ளன. அன்று 36 கோடி செலவாகுமென மதிப்பிடப்பட்டது. இப்போது செலவாகியுள்ள தொகை 388 கோடி! தாமதங்களைத் தவிர்த்திருந்தால் இத்தனை செலவு அதிகரித்திருக்காது. எனினும் இதைக் கட்ட 80 சதவிகிதம் உள்நாட்டுப் பொருள்களும் உள்நாட்டுத் தொழில் நுட்பமும் பயன்படுத்தப்பட்டன என்பது பெருமைக்குரிய விஷயம். இப் பாலத்தின் மீது செல்லும் வாகனங்களின் மேல் டோல்வரி வசூலித்து இதைக் கட்டச் செலவான தொகையை ஈடுசெய்யப் போகிறார்கள்.

– சு. கிருஷ்ணமூர்த்தி

வட்டமேஜை

# புதுக் கோணம்; சரியான கோணம்!

◆ ''கொள்ளிடத்தில் விழுந்த திருவள்ளுவர்'' தலையங்கத்தைச் சரியான கோணத்தில் சிந்தித்து எழுதியிருப்பது மக்களின் மனக்குமுறலை எதிரொலிப்பதாக இருந்தது.
இரணியல், இரணியல் கலை.

◆ இது வரை யாரும் சிந்திக்காத கோணத்தில் எழுதப்பட்ட அருமையான தலையங்கம்.
மதுரை - 16, கே. குமார்.

◆ திருவள்ளுவர் பஸ் கொள்ளிடத்தில் விழுந்து, பல உயிர்கள் பலியானது அனைவரும் அறிந்ததே. இருப்பினும் அரிதான மானிட உயிர் பற்றி இத்தகைய ஒரு நெறியோடு எல்லோருடைய மனதிலும் பதியுமாறு, சிந்திக்க வைத்தது கல்கி தலையங்கம். மனிதாபிமானத்தோடு எழுதப்பட்ட தலையங்கத்தால் உண்மையிலேயே பத்திரிகை தர்மத்தின் உச்சியினை எட்டி விட்டது கல்கி.
தஞ்சாவூர் - 2, ஹரணி.

◆ நாலாயிரம் ரூபாய் சம்பள வேலையை உதறித் தள்ளிவிட்டு, கிராமப் பெண்களின் வாழ்க்கைத் தரத்தை உயர்த்துவதற்காக, ஈடு இணையற்ற தொண்டு புரியும் வசந்தா அவர்களுக்கு என் வாழ்த்துக்கள்.
கடம்பநல்லூர், ஏ.எஸ். மீனாட்சி சுந்தரம்.

◆ ''ராகிங்'' செய்பவர்கள் வெட்கித் தலை குனியவும், ராகிங் செய்யப்படுகின்றவர்கள் மன வலிமையுடன் சுதாரித்துக் கொள்ளவும் ஏற்ற கருத்துக்களைக் கொண்டிருந்தது ''உள் ளங்கையில் உலகம்'' சிறுகதை.
தஞ்சாவூர் - 7, வளர்மதி ஆசைத்தம்பி.

◆ 'சாக்லேட்டில் நிக்கல் கலக்கப்படுவதால் உடலுக்குக் கெடுதல் ஏற்படுமோ' என்ற பலரது சந்தேகத்தைத் தீர்க்கும் வகையில், காட்பரீஸ் நிறுவனத்தின் நிர்வாக இயக்குனர் பாலின் பேட்டிக் கட்டுரை விளக்கமாக அமைந்திருந்தது.
தூத்துக்குடி - 1, என். சம்பத்.

◆ காட்பரீஸ் கம்பெனியார் முதலில் தங்கள் சாக்லேட்டில் நிக்கல் கலப்பதில்லை என்றார்கள்; அனுமதிக்கப் பட்ட அளவிற்குக் கலப்பதா இப்போது அறிக்கை விடுகிறா கள். அனுமதிக்கப்பட்ட அள என்ன என்பதில்தான் பிர னையே! அது எந்த அள என்பதைச் சொல்லட்டுமே!
திருச்சி - 12, எஸ். ராஜ்.

◆ அசார் அணி அசத்துமோ, இல்லையோ, அதைப்பற்றி ஆழமாய் அலசப்பட்ட த களின் கட்டுரை அசத்தலோ அசத்தல்!
சிதம்பரம், த.கு.பா. பட்டுதுரை.

◆ 'தமிழக அரசியலில் க.சுவாமி'யின் பங்கு என்ன?' என்ற கேள்விக்குத் தராசு அளித்த பதிலைக் கண்டு வெகுவாக மெச்சினேன். நீர் இன்று போல் என்றும் பதில் சொல்ல வாழ்த்துகின்றேன்!
கச்சிராயபாளையம், - ஆர்.சி. மதிராஜ்.

◆ 'அன்னையின் மடியில்' - என்று ஒரு படம் வெளிவந்ததாகவே தெரியவில்லையே? ஒரு வேளை 'வீடியோ'வில் படம் பார்த்து விமர்சனம் எழுதினீரோ...?
சென்னை - 28, பி. சுரேஷ்.

◆ 'வைதேகி இட்ட விருந்து' - சிறுகதையாகவே தோன்றவில்லை. 'துரோணன்' அவர்களின் கைவண்ணத்தால் நாங்களும் அயோத்திக்கே சென்று, 'சொல்லின் செல் வனுக்கு' அளிக்கப்பட்ட விருந்தில் கலந்து கொண்ட பரவசம் ஏற்பட்டு விட்டது.
கள்ளக்குறிச்சி, வ. மதிவாணன்.




◆ மனத்தில் நீள நீளமான நாக்குகளை நீட்டி ஆக்ரோஷமாக எரிந்து கொண்டிருக்கும் தீ ஜுவாலைகளை ''தாய்மை'' மழையாக மாறி அணைத்து விடும் அற்புதத்தை 'மனத் தாது' சிறுகதை மூலம் மிக அழகாக சித்திரித்துக் காட்டியிருந் தார் அன்னம்.
அருகந்தம்பூண்டி, மலை அரசன்.

# எம்.ஜி.ஆருடன் ஒரு வாக்குவாதம்!

சடையப்பச் செட்டியார், மதன் (இவர் ஒரு சிந்தி நண்பர்) ஆகியோரைப் பார்ட்னர்களாகவும் எம்.ஜி..ஆரைக் கதாநாயகனாகவும் கொண்டு நான் எடுத்த அந்தப் படத்துக்குப் பெயர் ''லட்சியக்கனவு.''

இதே நேரத்தில் ஜேயார் மூவீஸ் ஆறுமுகம் என்னை அணுகி, எம்.ஜி.ஆரை வைத்துத் தாங்கள் எடுக்கவிருக்கும் படத்தை நான்தான் டைரக்ட் செய்ய வேண்டும் என்று ரொம்ப ஆர்வமாகச் சொன்னார். அந்தப் படத்துக்கு ''அண்ணா! நீ என் தெய்வம்'' என்று பெயர் வைத்தேன். அந்தப் பெயர் ரொம்பப் பிடித்துப் போனது எம்.ஜி.ஆருக்கு. ''இந்தப் படத்தைப் பிரமாதமாகப் பண்ண வேண்டும்'' என்றார்.

ஆனால், ''லட்சியக்கனவு'' வேகமாய் வளர்ந்து வந்த சமயம், படத்தின் டைட்டிலை ''மீனவ நண்பன்'' என மாற்ற வேண்டும் என்று எம்.ஜி.ஆர் அபிப்பிராயப் பட்டார்! அந்தப் புதிய டைட்டில் எனக்கும் பிடித்திருந்ததால் 'சரி' என்று மாற்றி விட்டேன். ஆனால் வேகமாக வளர்ந்து வந்த படம், இடையில் சில மாதங்கள் தடைப்பட்டு நின்றது. காரணம் எனக்கு ஏற்பட்ட ஒரு விபத்து!

ஒரு நாள் இரவு நான் பாத்ரூமிலிருந்து வெளியே வரும் போது தரை வழுக்கி, தலை குப்புற விழுந்து விட்டேன். கீழே கிடந்த ஒரு இரும்புக் கம்பி இடது கண்ணில் குத்த, என் விழியே வெளியே வந்து விட்டது! நடு இரவில் பிரபல கண் டாக்டர் பத்ரிநாத்தைத் தொந்தரவு செய்ய வேண்டாம் என்று நினைத்து, உடனடி சிகிச்சைக்காக அரசு மருத்துவ மனைக்குப் போனேன். இரவு டியூட்டியில் இருந்த டாக்டர், விழியைப் பொருத்தித் தைத்து விட்டார். மறு நாள் டாக்டர் பத்ரி நாத்திடம் போனபோது அவர் ரொம்ப வருத்தப் பட்டு விட்டார்.

''உடனே என்னிடம் வந்திருக்க வேண்டியதுதானே? கண் சிகிச்சை என்பது ஸ்பெஷலிஸ்டுகள் கவனிக்க வேண்டியது அல்லவா? இது கூட தெரிய வேண்டாமா? இப்போது விஷயம் சிக்கலாகிவிட்டதே!'' என்று கூறி, சிகிச்சை ஆரம்பித்தார். அவரிடம் முதலிலேயே சென்றிருந்தால் சீக்கிரம் குணமாகியிருக்கலாம்; இப்போது ட்ரீட்மெண்ட் முடிய இரண்டு மாதங்கள் ஆகிவிட்டன.

நான் குணமடைந்ததும் இழந்து விட்ட நேரத்தைத் திரும்பப் பெறும் முயற்சியில், ஒரே சமயத்தில் இரண்டு படங்களையும் டைரக்ட் செய்தேன். எம்.ஜி.ஆர்., லதா, சங்கீதா ஆகியோர் நடிக்க, ''அண்ணா நீ என் தெய்வ''மும், எம்.ஜி.ஆர்., லதா, வெண்ணிற ஆடை நிர்மலா நடிக்க, ''மீனவ நண்ப''னும் வளர்ந்தன.

மீனவ நண்பனின் சில காட்சிகளுக்கு நாங்கள் தேர்ந்தெடுத்திருந்த இடம் மணிபால். அங்கே இரண்டு நாள் முன்னதாகவே நானும் சடையப்பச் செட்டியாரும் போய் விட்டோம். இருபது நாள் ஷூட்டிங்குக்கு இடங்களைத் தேர்ந்தெடுத்துக் குறித்துக் கொண்டேன். ஷூட்டிங் ஆரம்பிக்க வேண்டிய தினத்தில் -

சடையப்பச் செட்டியாருக்கு ஹார்ட் அட்டாக்!

உடனடியாக அவரை அங்குள்ள கஸ்தூரிபா மருத்துவமனையில் சேர்த்து விட்டு சென்னையில் அவரது குடும்பத்தினருக்கு ஃபோனில் தகவல் தந்தோம். அவர் மகன் ஓடோடி வந்தார்.

எம்.ஜி.ஆரும் குறிப்பிட்ட நாளில் வந்து சேர்ந்துவிட்டார். 'ஷூட்டிங் நடத்துவதா வேண்டாமா?' எம்.ஜி.ஆரைக் கலந்து ஆலோசித்தேன். 'ஷூட்டிங்கை நிறுத்த வேண்டாம்; செட்டியாரை காலையிலும் மாலையிலும் போய்ப் பார்த்து வரலாம்' என்று முடிவு செய்தோம். சடையப்பச் செட்டியார் மகனிடம் ஷூட்டிங் தொடர்பான பண விவகாரங்களை ஒப்படைத்தேன். ஷூட்டிங் திட்டமிட்டபடி நடப்பதில் செட்டியாருக்கும் மகிழ்ச்சி.

இந்த சந்தர்ப்பத்தில்தான் ஒரு நாள் நம்பியார், ''மூகாம்பிகை கோவில் பக்கத்தில்தான் இருக்கிறது; போய் அம்மனைத் தரிசித்துவிட்டு வர உங்க அனுமதி வேண்டும்'' என்று எம்.ஜி.ஆரிடம் கேட்டார்.

**டைரக்டர் ஸ்ரீதர்**

''அதற்கென்ன தாராளமாய்ப் போய் வாங்க'' என்று எம்.ஜி.ஆர் கூற, மறுநாளே எம்.ஜி.ஆர் தவிர மற்ற அனைவரும் சென்று வந்தோம். மூகாம்பிகை பற்றி எங்களிடம் நிறையக் கேட்டறிந்தார் எம்.ஜி.ஆர்.

சில நாட்கள் சென்று டைரக்டர் சங்கர் மணிபாலுக்கு வந்தார். தானே வந்தாரோ அல்லது எம்.ஜி.ஆரால் அழைக்கப்பட்டு வந்தாரோ தெரியாது. மறுநாள் காலை அவரும் எம்.ஜி.ஆருமாக மூகாம்பிகை கோயிலுக்குப் போய் தரிசித்துவிட்டு வந்தார்கள்! இதுதான் எம்.ஜி.ஆர். முதல் தடவையாக மூகாம்பிகை கோயிலுக்குப் போய் வந்த வரலாறு!

'மீனவ நண்பன்' எடுத்த போது இன்னொரு சுவையான சம்பவமும் நிகழ்ந்தது. இந்தப் படத்துக்காக மூன்று பாடல்களை



✤ மீனவ நண்பன் - ஒரு காட்சி

எம்.எஸ்.வி.யைக் கொண்டு இசையமைக்கச் சொல்லிப் பதிவு செய்தேன். பிறகு அவற்றை எம்.ஜி.ஆருக்குக் கேட்க அனுப்பி வைத்தேன். 'உரிமைக் குரல்' படத் தயாரிப்பின் போதும் இப்படித்தான் நடந்தது. அதே போல் இப்போதும் எம்.ஜி.ஆர்., பாடல்களைக் கேட்டுவிட்டு ஓ.கே. கூறியும் விட்டார். நான்காவதாக ஒரு பாடலைப் பதிவு செய்து டேப் ரிகார்டர் சகிதம் சடையப்பச் செட்டியாரை அனுப்பினேன். பாட்டைக் கேட்ட எம்.ஜி.ஆர்., ''டியூன் சரியில்லை. எம்.எஸ்.வியிடம் சொல்லி வேறு நாலைந்து டியூன் போட்டு அனுப்பி வையுங்கள். நான் தேர்ந்தெடுத்த பிறகு பாடல் எழுதி ரெகார்ட் பண்ணலாம்'' என்று கூறித் திருப்பி அனுப்பிவிட்டார்.

எனக்கு இது அதிர்ச்சியாக இருந்தது. எஸ்.பி.பாலசுப்பிரமணியம் பாடிய அந்த அற்புதமான பாடலை நிராகரிக்க எம்.ஜி.ஆருக்கு எப்படி மனம் வந்தது என்றே எனக்குப் புரியவில்லை!

எம்.எஸ்.விக்கு விஷயம் தெரிவிக்கப்பட்டது. அவர் மறுபடி டியூன் போட உட்கார்ந்த போது என்னையும் உடனிருக்கச் சொன்னார். நானோ, ''நீங்க டியூன் போடப் போறீங்க; எம்.ஜி.ஆர். செலக்ட் பண்ணப் போறாரு; இடையே நான் எதற்கு?'' என்று கூறி நகர்ந்து விட்டேன். எம்.எஸ்.வி. போட்ட டியூன்களில் ஒன்றை எம்.ஜி.ஆர். தேர்ந்தெடுக்க, அதற்கு வாலி பாட்டு எழுதி, பாடல் பதிவுக்கு நாளும் குறிக்கப்பட்டது.

இந்தச் சமயத்தில் எஸ்.பி.பி. பாடிய பாடலை எம்.ஜி.ஆர். ஏன் நிராகரித்தார் என்பதற்கான பின்னணியும் எனக்குத் தெரிய வந்தது. யாரோ எம்.ஜி.ஆரிடம் போய், ''வழக்கமாக நீங்க நடிக்கிற படங்களுக்கு உண்டான பாடல் டியூன்களை நீங்களேதானே செலக்ட் பண்ணுவீங்க? இப்ப ஸ்ரீதர் படங்களுக்கு அவரே செலக்ட் பண்ணுறாரே? உங்களை விட அவர் பெரிய ஆளா? 'எம்.ஜி.ஆர் படங்களுக்கே நான்தான் டியூன் செலக்ட் பண்ணுறேன்' என்று அவர் சொல்லிக் கிட்டுத் திரியறாரு'' என்று கோள் கூறியிருக்கிறார்கள். பொறாமை காரணமாக, எம்.ஜி. ஆரிடம் எனக்கு ஒரு கெட்ட பெயரைச் சம்பாதித்துத் தரும் நோக்கில், பேசப்பட்ட இந்தப் பொய் எம்.ஜி.ஆரைச் சற்று கலக்கி விட்டது. தமது சுப்பீரியாரிட்டியை நிலைநாட்ட வேண்டும் என்பதற்காக அவர், ''டியூன் சரியில்லை'' என்று கூறி, எஸ்.பி.பி.. பாடிய பாடலை நிராகரித்திருக்கிறார்.

மாற்றுப் பாடல் பதிவாக வேண்டிய தினத்தன்று காலை, சத்தியா ஸ்டூடியோவில் எம்.ஜி.ஆரை நான் சந்தித்தேன். ''மத்தியானம் ரெகார்டிங் இருக்கா?'' என்று கேட்டார் எம்.ஜி.ஆர்.

''ஆமாம்.''

''டியூன் எப்படி?''

நான் சற்றும் தயங்காமல், ''எனக்குத் திருப்தி இல்லை'' என்று கூறினேன்.

ஒரு நிமிஷ மௌனத்துக்குப் பிறகு எம்.ஜி.ஆர்., ''அப்படியானால் ரிகார்டிங்கை கேன்சல் செய்துடுங்க'' என்றார்.

''வேண்டாம்; நீங்க தேர்ந்தெடுத்த டியூன்-பாடலையே ரிகார்ட் பண்ணுவோம்'' என்றேன் நான்.

அடுத்த சில நிமிடங்கள் எங்களுக்குள் வாக்கு வாதம் தொடர்ந்தது!

படம் உதவி : பிலிம் நியூஸ் ஆனந்தன்.

**வடக்கு வாசல் :**

# ராஜேஷ்கன்னா தந்த தலைவலி!



* ராஜேஷ் கன்னா - "இந்த வீடே வேண்டும்."

புதிதாகத் தேர்ந்தெடுக்கப்பட்டு, புதுதில்லியில் எம்.பி.யாகப் பதவியேற்ற நடிகர் ராஜேஷ் கன்னாவுக்கு, உபஜனாதிபதி கே. ஆர். நாராயணன் குடியிருந்த 81, லோதி ரோடு வீடு ஒதுக்கப்படலாம் என்று கூறப்பட்டது. ஆனால் நாராயணன் முழுவதுமாகக் காலி செய்து, இந்த வீடு மத்திய பொதுப் பணித் துறையிடம் ஒப்படைக்கப்படுவதற்குள்ளேயே, ராஜேஷ்கன்னா அந்த வீட்டிற்குக் குடிபுகுந்து விட்டார். இதற்கிடையில் அவருக்கு "பண்டாரா பார்க்கில் வேறு ஒரு வீடு ஒதுக்கப்படுகிறது; லோதி ரோடு வீடு அல்ல" என்ற செய்தியும் அவருக்குக் கிட்டியது. 'எனக்கு இந்த வீடே போதும். நான் இங்கிருந்து மாற விரும்பவில்லை' என்றார் கன்னா. "நாராயணன் காலி செய்த இந்த வீட்டின் சாமான்கள் இன்னும் கணக்கெடுக்கப்படவில்லை. சரியான அரசாங்க உத்தரவு இல்லாமல் கன்னா இதில் குடியேற முடியாது" என்று C.P.W.D. இன்ஜினியர் சுட்டிக்காட்ட, கன்னாவின் அந்தரங்கச் செயலாளர் அவரை அடித்து விட்டார்! இதனால் கோபமடைந்த எல்லா ஜூனியர் என்ஜினியர்களும் வேலை நிறுத்தம் செய்தனர். இதற்கிடையில் ராஜேஷ் கன்னா ரசிகர் மன்றம், "இவருக்கு லோதி ரோடு வீடு இல்லை என்றால் நாங்கள் தீக்குளிப்போம்" என்று அறிக்கை விட்டது! ராஜேஷ் கன்னா தாது செயலரின் செய்கைக்காக மன்னிப்புக் கேட்டாலும் அதே லோதி ரோடு வீட்டில்தான் இன்னமும் இருக்கிறார்! இந் நிகழ்ச்சி பார்லிமென்ட் ஹவுஸிங் கமிட்டியின் சேர்மன் கவனத்திற்கும் கொண்டு செல்லப்பட்டிருக்கிறது. பொதுவாக எதிர்க்கட்சி எம்.பிக்களால்தான் ஆளுங்கட்சிக்குப் பிரச்னைகள் வருவது வழக்கம். இங்கோ, நிலைமை தலைகீழ்!

## குப்பை அள்ளுவதில் கொழுத்த லாபம்

"உங்கள் குப்பையை எங்களிடம் வீசுங்கள்" என்பதுதான் பாதுகாப்புப் படையிலிருந்து ஓய்வு பெற்ற 44 வயது காப்டன் ஜே. கே. வர்மாவின் தாரக மந்திரம்! இவர் 'வீட்டுக் குப்பையை அள்ளுவோர் அமைப்பு' ஒன்றை ஆரம்பித்துள்ளார். ஐந்து லட்சம் ரூபாய் மூலதனத்தில் ஆரம்பித்த இத் தொழிலில், 43 சீருடை அணிந்த இளைஞர்கள் ஈடுபட்டிருக்கிறார்கள். இவரிடம் காகிதக் குப்பையைக் கூழாக்கி மறுமுறையும் காகிதமாக்கவும், பிளாஸ்டிக் உடைசல்களைப் பதப்படுத்தி, புது பிளாஸ்டிக் ஆக்கவும், மற்ற குப்பைகளை உரமாக்கவும் இயந்திரங்கள் உள்ளன. 'குப்பைகளை வாருவது ஒரு குறிப்பிட்ட ஜாதியாரின் பணி' என்றிருந்ததை மாற்ற, இவர் எல்லா ஜாதி இளைஞர்களையும் இதில் ஈடுபடுத்தியுள்ளார். "இது வேலை வாய்ப்புத் தரும் ஒரு நாகரிகமான தொழில்" என்கிறார் வர்மா. தாது அங்கத்தினரிடமிருந்து ஒரு சிறு தொகையை வசூலித்து, அவர்களுக்கு அழகிய பிளாஸ்டிக் பைகளைக் கொடுத்து, அதில் தங்கள் வீட்டுக் குப்பைகளைக் கட்டி வைக்கப் பழக்கியிருக்கிறார் இவர். இப்போது இவர் பணியாற்றும் தெருக்களில் குப்பைகூளங்களைப் பார்ப்பதே அரிது! "இம் முறையால் கணிசமான லாபத்தையும் பெற முடியும்" என்கிறார் வர்மா!

## பாதாளச் சாக்கடைகளா, மரணக் குழிகளா?

போதை மருந்துக்கு அடிமைப்பட்ட சில சமூக விரோதிகள் வெறும் ஐந்து ரூபாய்க்கு ஆசைப்பட்டு பாதாளச் சாக்கடைகளின் மூடிகளை எடுத்து விற்கப் போக, அதுவே இன்று வரை ஒன்பது உயிர்களுக்கு எமனாக முடிந்திருக்கிறது. இந்த காங்கிரீட் மூடிகள் (இரும்பு மூடிகள் இன்னும் விலை அதிகம்) திருடு போகும் போது, கார்ப்பரேஷன் அலுவலர்களின் மெத்தனத்தாலும் அலட்சியப் போக்காலும் வேறு மூடிகள் போடப்படாமலே இருக்கின்றன. கொதிப்படைந்த தில்லி பொதுமக்கள் கூக்குரல் எழுப்ப, இப்போது கார்ப்பரேஷன் உயர்மட்ட அதிகாரிகள் விழித்துக் கொண்டு, போர்க்கால நடவடிக்கைகள் எடுத்திருக்கின்றனர். சில திருட்டுக்களுக்கு கார்ப்பரேஷனின் தொழிலாளிகளே உடந்தை என்று தெரியவர, 'இனி அத்தகைய கேஸ்களில் ஊழியரின் சீட்டுக் கிழிக்கப்படும்' என்று அறிவித்திருக்கிறார் கமிஷனர்!

– ராஜீவி நரசிம்மன்

!! கடல் பயணத்தின் போது கடக்கும் ஒரு மைல் தூரம் தரைப் பயணத்தின் போது கடக்கும் ஒரு மைல் தூரத்தைக் காட்டிலும் அதிகம். கடல் பயண மைல் (nautical mile) 6080 அடி. தரையில் 5280 அடி.

!! உலகின் ஜனத் தொகையில் பாதி நான்கு நாடுகளில் வாழ்கிறது : சைனா, இந்தியா, ரஷ்யா (இப்போது பல சுதந்திரப் பிரதேசங்களாகப் பிரிந்து விட்டது) அமெரிக்கா.

!! நம் உடலில் ரத்தம் ஒருமுறை சுற்றி வர அறுபது வினாடிகளே எடுத்துக் கொள்கிறது.

!! உடலின் மிகச் சிறிய தசை காதில் உள்ளது. ஓர் அங்குலத்தின் இருபதில் ஒரு பங்கு அளவே இருக்கும் இது.

!! ஒவ்வொரு நகமும் கணுவி லிருந்து விரல் நுனி வரை வளர ஆறு மாதங்கள் எடுத்துக் கொள்ளும்.

!! நடு விரலில் உள்ள நகம் மற்ற விரல் நகங்களைக் காட்டிலும் வேகமாக வளரும். பியானோ வாசித்தல் டைப் அடித்தல் போன்று விரல் நுனிக்கு அழுத்தம் தரும் வேலைகளைச் செய்வோரது நகங்கள் மற்றவர்களுடையதைக் காட்டிலும் வேகமாக வளரும்.

!! பாதங்கள் குளிராமல் இருக்க தலையில் தொப்பி அணிந்து கொள்ளவும். உடலில் எண்பது சதவிகிதம் வெப்பம் தலை வழியேதான் வெளியேறுகிறது.

## பாதம் குளிராதிருக்கத் தொப்பி அணியுங்கள்!




!! ஒரு நிமிடத்தில் இருபத்தைந்து முறை (சராசரியாக) நாம் கண்களைக் கொட்டுகிறோம்.

!! கட்டை விரல் மனித இயக்கத்துக்கு எவ்வளவு இன்றியமையாதது என்பதை விளக்குகிறது ஓர் உண்மை : நமது மூளையில், கட்டை விரலைக் கட்டுப் படுத்தி இயக்கும் பகுதியானது, மார்பு, வயிறு ஆகியவற்றைக் கட்டுப்படுத்தி இயக்கும் பகுதியைக் காட்டிலும் பெரியதாகும்.

!! பழைய துருப்பிடித்த தகரம் அல்லது ஆணி கிறி, ரத்தக் காயம் ஏற்பட்டு விட்டால் டெடனஸ் தாக்கும் என நம்பு கிறோம். உண்மையில் டெடனஸை வர வழைப்பது துரு அல்ல; துருப்பிடித்த தகரம் அல்லது ஆணியில் உள்ள அசுத்தமே அதற்குக் காரணம். அதிலுள்ள டெடனஸ் பாக்டீரியா கிருமிகளே டெடனஸ் நோய்த் தொற்றுக்கு வழிவகுக்கின்றன.

தொகுப்பு : உதய்லால்

# பாப்கார்ன் கனவுகள் 2

சென்ற வாரம் :

லக்ஷ்மிநாராயணனுக்கும் விஜயலக்ஷ்மிக்கும் பெற்றோர் பார்த்து நிச்சயித்துக் கல்யாணம். முகூர்த்தத்துக்கு முதல் நாள் இரவு, தாயார் சொல்லச் சொல்லக் கேளாமல் நண்பர்களுடன் செகண்ட் ஷோ பார்க்கப் போன லக்ஷ்மிநாராயணன், விடிந்தும் மண்டபத்துக்குத் திரும்பவில்லை - நண்பர்களுடன் டீக் கடையில் அரட்டையடித்துக் கொண்டிருக்கிறான். கடை ரேடியோவில் காலை ஒலிபரப்பு மங்கள இசையுடன் ஆரம்பிக்க, அந்த ஒலி முகூர்த்த நேரம் நெருங்கி விட்டதை நினைவுபடுத்த, அவசரமாக ஓடிப்போய்த் தாலி கட்டுகிறான். விஜயலக்ஷ்மியின் அப்பா பொறுப்பில்லாத மாப்பிள்ளையைப் பற்றி அங்கலாய்த்து, பெண்ணுக்குச் சமாதானம் சொல்லி முடிக்கையில், லக்ஷ்மிநாராயணன் இடைமறித்து அவளைப் பகல் காட்சி சினிமாவுக்கு அழைக்கிறான்.

"விஜயலக்ஷ்மி இல்லே?"

அறையிலிருந்த பெண்கள் உள்ளறைக்கு ஓடி அங்கிருந்து தலையை நீட்டி லக்ஷ்மிநாராயணனைப் பார்க்கிறார்கள். அழுதது தெரியாமல் சமாளித்துக் கொண்டு அவளின் தந்தை மாப்பிள்ளையை வரவேற்க, விஜயலக்ஷ்மி ஒரு அடி முன் நகர்ந்து குனிந்த தலை நிமிர்கிறாள்.

"வா."

ஒற்றைச் சொல்லை உதிர்த்து விட்டு, லக்ஷ்மிநாராயணன் வேகமாய் நடக்க, அவள் எதுவும் புரியாமல் தந்தையிடம் கண்களில் விடைபெற்று அவசரமாய் அவன் பின் தொடர்கிறாள். அனைவரும் பார்க்க இருவரும் நடந்து, மண்டபத்தின் வாசலுக்கு வர, வழியில் எதிர்ப்பட்டு பின்னாலேயே வருகிற தாயாரின் கேள்விகளுக்கு மதியம் நலங்குக்குள் வந்து விடுவதாய் வாக்களித்து, லக்ஷ்மிநாராயணன் வெளியே கையசைக்க, கார் ஒன்று புறப்பட்டு அருகில் வந்து நிற்கிறது. அவன் ஏறிக் கொள்கிறான். அவள் உடன் அமர்கிறாள்.

"இது மாமா கார். இன்னிக்கு ஒரு நாளைக்குத்தான் நமக்கு. நாளையிலேர்ந்து பல்லவன் பஸ்லதான் போகணும்."

ஒரு கண்ணை இடுக்கிக் கொண்டு



அவன் குரல் மாற்றிய போது, முகத்தில் நொடியில் வந்து போன அந்த நகைச்சுவை நடிகரின் சாயலை அதிசயித்து, அவள் முறுவலித்துத் தலை குனிகிறாள்.

மவுண்ட் ரோடு தியேட்டர் முன் கார் நிற்கிறது. குளிர்சாதனம் செய்யப்பட்ட, ஆட்கள் அதிகம் இல்லாத அரங்கத்தில் அருகே இடித்தாற் போல் அமர்ந்திருக்கிற லக்ஷ்மிநாராயணனின் முன் யோசனையையும், அவசரத்தையும் உள்ளுக்குள் சிந்தித்தவளாய் புது மணப்பெண் விஜயலக்ஷ்மி மேற்கொண்டும் எதிர்பார்த்துக் காத்திருக்கிறாள். விளக்குகள் அணைகின்றன. இரவு முழுவதும் நண்பர்களுடன் டீக்கடையில் கண் விழித்துக் கழித்த களைப்பில் லக்ஷ்மிநாராயணன் நியூஸ்ரீலில் கொட்டாவி விட்டு, படம் துவங்கி டைட்டில் ஓடுகிற போதே அவள் மேல் தூங்கி விழுகிறான்.

**நி**லங்கு நடந்து கொண்டிருக்கிறது.

மணமகள் விஜயலக்ஷ்மியின் சிவந்த பாதங்களில் மின்னுகிற வெள்ளிக் கொலுசைச் சுற்றி, குங்குமக் கரைசலில் மருதாணி போல் மணமகன் லக்ஷ்மிநாராயணன் கோடுகள் வரைந்து புள்ளியும் வைக்கிறான்.

தலையைச் சுற்றி அடித்த போது உடையாத நமர்த்துப் போன அப்பளத்தை சமயோசிதமாய் லக்ஷ்மிநாராயணன் கிழித்தெறிகிறான்.

பழுத்த முகத்தில் மஞ்சள் பூசிச் சுங்குடி கட்டிய சுமங்கலிப் பாட்டி பாடல் வரிகளில் மாப்பிள்ளையைக் கிண்டல் செய்து லாலி இசைக்க, பதிலுக்கு ஆவேசமாய் அதே வயதில் இன்னொரு மூதாட்டி மணமகளின் லட்சணங்களைப் பாடிக் கேலி செய்கிறாள்.

நடுவே தேங்காய் உருட்டப்படுகிறது.

மணமகன் ஒரு கையில் அதை உறுதியாய்ப் பிடித்துக் கொள்ள, மணமகள் இரு கைகளையும் உபயோகித்து, தேங்காயைப் பிடுங்க முயல வேண்டும்.

''ஆனா கிள்ளக் கூடாது.''

கும்பலில் ஒரு ஜனரஞ்சகப் பெரியவர் குரல் கொடுக்க, அலைச் சிரிப்பில் நெடுகக் கிளுகிளுப்பு பரவுகிறது.

அனைவரின் கண்களும் லக்ஷ்மிநாராயணன், விஜயலக்ஷ்மியின் பிணைந்து சிவந்த கைகளில் குவிந்திருக்க, மணமகளின் தோழியர் அவளை உற்சாகப்படுத்த, பதிலுக்கு மணமகனின் தோழர்கள் அவனை வெறியேற்றுகிறார்கள். முகத்தில் சிரிப்பு மாறாமல் லக்ஷ்மிநாராயணன் பிடித்த கைநடுங்கச் சமாளித்து உட்கார்ந்திருக்கிறான். ''விடாதே விஜி'' என்று கீச்சுக் குரல்களில் தோழியர் கத்தியதில் வேகம் கூடியவளாய் நாக்கைக் கடித்து, மூச்சைப் பிடித்து எதுவுமே பயனில்லாமல் போன ஆத்திரத்தில் கலங்கிய மணமகளின் கண்களிலிருந்து ஒரு சொட்டு லக்ஷ்மிநாராயணனின் புறங்கையில் விழ, அவன் பதறிப் போய் விட்டுத் தந்து வெற்றியடைந்த உல்லாசக் கூச்சல்களின் நடுவே விஜயலக்ஷ்மி, அவனைப் புரிந்து கொண்டவளாய்க் கண்களில் தேக்கிய நன்றியுடன் பார்க்கிறாள்.

**மா**லையில் திருமண வரவேற்பு. கச்சேரியின் நடுவே நண்பர்கள் கேட்டுக் கொண்டதற்கிணங்க, அனைவரும் கை தட்டி ஆரவாரம் செய்து மகிழ்கிற அளவுக்குப் பல குரல்களில் மாற்றிப் பேசி, கடைசியில் நிகழ்ச்சியின் ஸ்பெஷல் அயிட்டமாக மாமனார் தவக்களித்த வரதட்சிணை சீர் வரிசைகளை விமர்சித்து, வாரியார் குரலில் அவன் செய்கிற உபன்யாசத்தில் கடுகடுத்த மாமனார் தவிர்த்து மண்டபமே கலகலக்கிறது.

வரவேற்பு முடிந்து அப்பாடா என்று மீண்டும் வேட்டிக்கு வந்து நண்பர்களுடன் நிம்மதியாய் சிகரெட் பற்ற வைக்கக் குனிகிற லக்ஷ்மிநாராயணன் முன் வைதீகர் வந்து நிற்கிறார்.

''என்ன?''

''ஒரு அரை மணி நேரம். சின்ன

ம.வே.சிவகுமார்

ஹோமம் ஒண்ணு பாக்கியிருக்கு.''

''மந்திரமா? இவ்வேரத்துக்கா?''

லக்ஷ்மிநாராயணன் கடிகாரத்தில் குனிந்து மணி பார்க்கிறான்.

''ரெத்தையாச் சொன்னா கிருஷ்ண விக்ரஹமாட்டம் குழந்தை பிறக்கும்.''

**ப**ளீரென்ற விபூதிப் பட்டையுடன் கையில் தலையணை சுமந்து பாடிக் கொண்டே மொட்டை மாடியில் தனியே காற்று வாங்கி உறங்க ஒதுங்கிய பெரியப்பா, மேலே தம்பதியர் சயன அறைக்கதவின் வெளிச்சக் கோட்டில் கண்பதித்து நிற்கிற நான்கைந்து சமையல்கார இளைஞர்களை முதுகில் சப்தம் போட்டு விரட்டுகிறார். சுற்று முற்றும் பார்த்துப் பெரியப்பா வெளிச்சக் கோட்டில் கண் பதிக்கிறார்.

சற்று நேரமாகவே லக்ஷ்மிநாராயணன், விஜயலக்ஷ்மியை பாடச் சொல்லி வற்புறுத்திக் கொண்டிருந்திருப்பான் போலிருக்கிறது. அவள் வெட்கத்திலும், பயத்திலும், இன்னது பாடுவது என்று தெரியாத குழப்பத்திலும் தொடர்ந்து மௌனமாய் இருக்கிறாள். கோபம் கொண்ட லக்ஷ்மி நாராயணன் சட்டையெடுத்து அணிந்து அறைக்கதவை நோக்கி நடக்க, புது மனைவியின் பாடல் வரிகள் தடுத்துத் திரும்பி நின்று சிரிக்கிறான். பாதியில் சினிமா போல் தானும் சேர்ந்து கொள்கிறான். பாட்டு முடிகிறது.. முதல் நாள் கண் விழித்த களைப்புடன், அன்றைய அலுப்பும் சேர்ந்து கொள்ள லக்ஷ்மிநாராயணன் படுக்கையில் மீண்டும் உறங்கி விடுகிறான். போர்வையைச் சரி செய்து, தனக்குள் சிரித்துக் கொண்டு மணமகள் விஜயலக்ஷ்மி அவனருகில் கண்களை மூடிக் கொள்கிறாள்.

**கண்** கலங்கி நிற்கிற பெற்றோர்களிடம் விஜயலக்ஷ்மி நமஸ்கரித்து விடை பெறுகிறாள். நன்கு வளர்ந்து விட்ட அவள் சகோதரர்களும் கலங்கி விடுகிறார்கள்.

குடித்தனச் சாமான்கள் ஏற்றிய டெம்போவிலேயே நாற்காலி போட்டு லக்ஷ்மி நாராயணன் உட்கார்ந்திருக்க விஜயலக்ஷ்மி ஸ்டூலில் கால் வைத்து ஏறி அவனருகில் அமர்ந்து கொள்கிறாள். கதவு மூடி, பக்கவாட்டில் கைகளை அசைக்க, டெம்போ, புறப்பட்டு உலகம் பின்னோக்கி நகர்கிறது.

நெடுஞ்சாலையில் டிவிஎஸ் - 50யில் மைத்துனர்கள் வழிகாட்ட, பின்னால் டெம்போ தொடர்கிறது.

''ப்ச்...''

விஷமம் செய்கிற லக்ஷ்மிநாராயணன் கைகளை விஜயலக்ஷ்மி தட்டி விட, கடக்கிற ஸ்கூட்டர் பின் இருக்கையில் விஷமத்தைப் பார்த்து விட்ட பெண்ணொருத்தி முகம் சிவந்து போகிறாள்.

''காலையிலே அம்மா எங்கிட்ட கேட்டா.''

சொல்லிவிட்டு விஜயலக்ஷ்மி வெட்கத்தில் குனிந்து கொள்கிறாள்.

''என்ன?''

மல்லிகை ஒன்றை முகர்ந்து கொண்டே டெம்போவில் லக்ஷ்மிநாராயணன் கேட்கிறான்.

காதுகளில் ஜிமிக்கி சொல்லமாட்டேன் என்பது போல் ஆடுகிறது.

''சும்மா சொல்லு.''

''ம்ஹூம்.''

''அப்ப குதிக்கற வேண்டியதுதான்.''

டெம்போவிலிருந்து குதிப்பதைப் போல லக்ஷ்மிநாராயணன் அபிநயிக்க, விஜயலக்ஷ்மி பதறியவளாய் அவனை உட்காரச் செய்கிறாள்.

கூலிங்கிளாஸ் அணிந்து முறைத்துப் பார்த்து மோட்டார் பைக்கில் ஒருவன் பின்னாலேயே வர, கச்சேரியின் இடையில் பாகவதர் மேல் துண்டில் மறைத்துக் கொண்டு தம்ளர் பால் குடிப்பதைப் போல, புது மனைவியைத் தன் அங்கவஸ்திரத்தில் மறைத்து மணமகன் லக்ஷ்மிநாராயணன் கூலிங்கிளாஸ் ஆசாமியை ரோட்டைப் பார்த்து ஓட்டச் சொல்கிறான்.

''உம்.''

வெட்கத்தில் சிவந்தவளாய் விஜயலக்ஷ்மி அமர்ந்திருக்கிறாள்.

''சொல்லு...''

பதில் தயங்கித் தயங்கி வருகிறது.

''இல்லே ரெண்டு பேரும் சேர்ந்துட்டேளான்னு கேட்டா.''

''பார்த்தா சாது மாதிரி இருந்துக்கிட்டு இந்தப் பொம்பளைங்க என்ன கேள்வியெல்லாம் கேக்கறாங்கப்பா. கெடக்கட்டும். நீ என்ன பதில் சொன்னே?''

நாணத்தில் கவிழ்ந்த முகம் கவிழ்ந்த வண்ணமேயிருக்கிறது.

## நகைச்சுவை + விறுவிறுப்பு = பெரியதம்பி!

◆ எஸ்.வி. சேகரின் ''பெரிய தம்பி'' நாடகம் வெகு அருமை. ஒவ்வொரு வாரமும் சிரிக்க வைத்த நாடகத் தொடர் முடிந்து விட்டது என் பதில் வருத்தம். வசனம் எழுதிய வெங்கட்டுக்குப் பாராட்டு.

தென்காசி, எஸ். ஜெகன்.

◆ ''பெரிய தம்பி'' நாடகம் வாரா வாரம் வயிறு குலுங்கச் சிரிக்க வைத்தது! நாடகத்தை நேரில் பார்க்க முடியவில்லையே என்ற குறை... படித்த போது மறைந்துவிட்டது.

மேட்டூர் அணை - 2, ஆர். கருணாகரன்.



◆ வாரா வாரம் ஆரவாரமான சிரிப்பு வெடிகளை அள்ளி... அள்ளி... வீசிவந்த வள்ளல் பெரிய தம்பியைப் பிரிவது மனதுக்கு இமாலய வருத்தத்தைத் தருகின்றது.
தோட்டப்பாளையம், வடமாலவன்.

◆ கடந்த பன்னிரண்டு வாரங்களாக எங்களை மகிழ்ச்சிக் கடலில் ஆழ்த்தி, வயிற்றையும், விலாவையும் நோகச் செய்யும் அளவுக்கு ஹாஸ்ய விருந்து படைத்தது 'பெரிய தம்பி'.
மதுரை - 1, பிரபாகர் ப்ரியன்.

◆ ஒரு சிறந்த சிரிப்பு நாடகம், குறைந்த வாரத்தில் நிறைவு பெற்றாலும் நிறைவைத் தந்தது. எஸ்.வி. சேகருக்குப் பாராட்டுக்கள்.
கடையம், அன்பின் செபா.

◆ 'பெரிய தம்பி' விறுவிறுப்பாகவும், நகைச்சுவையாகவும் இருந்ததால் பன்னிரண்டு வாரங்கள் போனதே தெரியவில்லை.
திருச்சி - 8, டி. மாரியப்பன்.

டெம்போ மேடு, பள்ளம் என்று குலுங்கிச் சாய்ந்து பிரிகிற செம்மண் சாலையில் புழுதி கிளப்பி வில்லிவாக்கம் வாடகை வீடு முன்னால் நிற்கிறது. மைத்துனர்கள் மேற்பார்வையில் அனைத்தையும் இறக்கி வீட்டில் கொண்டு வைக்கிறார்கள்.

வீட்டுச் சொந்தக்கார நவகோடி அம்மாள் புதுமணத் தம்பதியருடன் பெரியவர்கள் யாரும் வராததில், அவசரமாய் ஆரத்தி கரைத்து எடுத்து ஓடி வருகிறாள்.

வாழ்க்கைப் படிகளின் முதல் படியில் தம்பதிகள் வலது கால் சேர்த்து வைத்து நுழைகிறார்கள். சுற்றிலும் வயல்கள் சூழ்ந்த அந்தப் புறநகர் வீட்டை, டில்லியில் பிறந்து வளர்ந்த விஜயலக்ஷ்மி ஆசையுடன் பார்க்கிறாள். அவள் கால் வரையில் வந்த அணில் மருண்டு திரும்பி ஓடுகிறது.

''அப்ப நாங்க வர்றோம் அத்திம்பேர்.''

உதவிக்கு வந்த மைத்துனர்கள் விடை பெறக் காத்திருக்கிறார்கள்.

''அத்திம்பேரா? அசந்தா பசங்க படுக்க வைச்சு பாரத் ரத்னா குடுத்துடுவீங்க போல இருக்கே? தோ பார், உன்னை விட ரெண்டு வயசுதான் நான் பெரியவன். சும்மா பேரு சொல்லிக் கூப்பிடு.''

லக்ஷ்மிநாராயணன் திரும்புகிறான். டெம்போ ஆட்கள் பணத்துக்குக் கைகட்டி நிற்கிறார்கள்.

''எவ்வளவுய்யா?''

''இருநூத்தி நாப்பது ரூபா சார்.''

''இருக்கட்டும். மண்டபத்திலே போய் மாமனார் கிட்டே வாங்கிக்க. வரட்டுமா?''

ஜன்னலில் விஜயலக்ஷ்மியின் முகம் பார்த்துத் தலையசைத்து மைத்துனர்கள் மொப்பெட்டில் புறப்பட்டுப் போகிறார்கள். டெம்போ பின் தொடர்கிறது.

இறக்கி வைத்த குடித்தனப் பொருட்களை வெளியே எடுத்து வைத்துக் கணவனும், மனைவியுமாகத் தம்பதியர் இருவரும் சிறு குருவிகள் போல் உல்லாசமாய் ஒவ்வொன்றையும் பார்த்து, தங்கள் வீட்டைத் திட்டமிடுகிறார்கள்.

தலையில் ஒட்டடையுடன் லக்ஷ்மிநாராயணன் குளிக்கப் போகிறான். மண்ணெண்ணெய் இல்லை. அதை வாங்கி வைக்கிற பிளாஸ்டிக் கேனும் இல்லை. சட்டையணிந்து லக்ஷ்மிநாராயணன் கடைக்குக் கிளம்புகிறான்.

பேன்சி ஸ்டோர்ஸில் எண்ணெய் கேனைக் காட்டி விலை கேட்கிறான்.

''எதுக்கு சார்?''

''எண்ணெய் வாங்கறதுக்குத்தான்.''

கையில் கேனுடன் நடக்கிற லக்ஷ்மிநாராயணன் ஒரு உள்ளுணர்வில் திரும்பிப் பார்க்கிறான்.

ஒரு கும்பலே அவன் பின்னால் கையில் பலரக கேன்களுடன் வந்து கொண்டிருக்கிறது.

ரேஷன் கார்டு இல்லை. நகரில் கடும் எண்ணெய்ப் பஞ்சம். தமிழன் முன் வைத்த காலைப் பின் வைப்பதில்லை. பல இடங்களில் அலைந்து திரிந்து கறுப்பு மார்க்கெட்டில் ஏக விலை கொடுத்து, ஏதோ சாராயக் கேன் போல ஆட்டோவில் மறைத்து வந்து லக்ஷ்மிநாராயணன் களைப்புடன் இறங்குகிறான். ஸ்டவ் சப்தம் வாசலிலேயே கேட்கிறது. சமையலறையில் விஜயலக்ஷ்மி சமையல் செய்து கொண்டிருக்கிறாள்.

''ஏது மண்ணெண்ணெய்?''

லக்ஷ்மிநாராயணன் ஆச்சர்யப்பட்டுக் கேட்கிறான்.

''பக்கத்து வீட்டு மாமி கொடுத்தா.''

இரவு சாப்பாடு முடிந்து, கணவனுக்குப் பாலைக் காய்ச்சி விஜயலக்ஷ்மி எடுத்து வருகிறாள்.

வீடு சுத்தம் செய்த களைப்புடன், மண்ணெண்ணெய் வாங்கிய அலுப்பும் சேர்ந்து கொள்ள இதற்குள் லக்ஷ்மிநாராயணன் இன்றைக்கும் தூங்கியிருக்கிறான்.

(தொடரும்)

# வாரிசு

**கா**ற்று வீசிக் கொண்டிருந்தது. மரங்களின் இருட்டுக் கிளைகள் நிலையில்லாமல் தவித்தன, வள்ளியின் மனதைப் போல.

வள்ளி பால்கனி ஊஞ்சலில் குப்புறப் படுத்திருந்தாள். இந்த ஊஞ்சல் அவளுக்கு மிகவும் பிடித்தமான ஊஞ்சல். அவளுடைய சிறிய கால்களால் தரையில் உதைத்து ஊஞ்சலாட்டும் வகையில் தாழ்வாக அமைக்கப்பட்ட ஊஞ்சல். அதன் பட்டையான மெத்தையில் இப்போது அவள் கண்ணீர் கொட்டிக்கொண்டிருந்தது.

ஊஞ்சல் வாங்கி இரண்டு மாதங்களுக்குள்தான் இருக்கும். அது வாங்கிய போதும், அப்பா கோபமாகத்தான் இருந்தார்.

''ஆனாலும் இதுக்கு ரொம்ப பிடிவாதம். ஆறாக்கு உசரம் இருந்தாலும் அடம் பெரிசு....''

அம்மாதான் பரிந்து வந்தாள், ''பாவம், ஆசைப்படுது. தங்க மாலையைக் கொண்டா, வைர அட்டிகையைக் கொண்டான்னா கேக்குது? ஐநூறு ரூபா சமாசாரம் தானே?''

தங்க மாலையிலும், வைர அட்டிகையிலும் இப்படி ஊஞ்சலாட முடியுமா என்ன? வள்ளிக்குப் புரியவில்லை.

கால்கள் நடந்து வரும் சத்தம் கேட்டது. வள்ளி முகத்தை அழுத்திக் கொண்டாள். அப்பாவாய் இருக்கும். வந்து கெஞ்சட்டும். அப்பாவின் கை அவள் முதுகின் மீது படப் போகிற கணத்திற்காக ஆர்வமாகக் காத்திருந்தாள்.

''கண்ணூ.....''

ச்சே, அப்பா இல்லை. காந்தாமணி.

''இப்படி சாப்பிடாம அடம் புடிக்கிறியே, செல்லம்? உடம்புக்கு ஒத்துக்குமா?''

காந்தாமணியின் கஞ்சிப்புடைவையின் விறைப்பும், அவள் கவந்த மூச்சும் வள்ளிக்குப் பிடிக்கவேயில்லை.

''ஆயா.. என்னத் தொடாத... எனக்குச் சாப்பாடு வேணாம்....''

''நாலு வயசுப் பொண்ணுக்கு இத்தனை பிடிவாதம் கூடாது.... சாப்பிடாட்டி வயுத்துல பூச்சிலாம் வரும்.. கடிக்கத் இன்னுடும்... வா.....''

''இன்னட்டும்.. நான் சாவறேன், போ...''

''என்ன கண்ணூ, இப்படில்லாம் பேசறே?''

''எனக்கு அம்மாவைப் பாக்கணும்... இப்பவே பாக்கணும்...'' - அடக்க முனைந்த அழுகை வெடித்துக் கொண்டு கிளம்பியது.

''ஷ்... அப்பா காதுல வுழப் போவுது... அப்பா ஏற்கெனவே கோவமா இருக்காரு... டைரக்டருங்கல்லாம் அவரைத் தான இட்டறாங்க...''

''காந்தா, நீ நவரு.....'' அப்பாவின் கட்டைக் குரல். வந்து அப்படியே அள்ளிக் கொண்டார். ஒற்றை விரலால் கண்ணீரைத் துடைக்க முனைந்தார். வள்ளி முகத்தைப் பின்னால் இழுத்துக் கொண்டாள்.

''உன்னைப் போலத் தான அப்பாவுக்கும் ஆசையாயிருக்கும் - அம்மாவைப் பாக்கணும்னு.... ரெண்டே நாள்... ஷூட்டிங் முடிச்சிட்டு ஓடியே போயிடலாம்...''

''இல்ல, எனக்கு இப்பவே அம்மாவைப் பாக்கணும்...''

''இத பாரு வள்ளி, நாளைக்கு க்ளைமாக்ஸ் பிடிக்கறாங்க. அப்புறம் ஹீரோ கால்ஷீட் கெடைக்காதாம். டைரக்டரு கெஞ்சறாரு.... நீ இப்படி முரண்டு பிடிச்சா எப்படி?''

''ஐயா, குழந்தை இட்ட கத்தாதீங்க... பயப்படுது...''

''நீ பேசாம இரு, காந்தா... எல்லாரும் செல்லம் கொடுத்துக் கொடுத்துத்தான் இப்படி கெட்டுப் போயிருக்கு. இன்னிக்கு முழு நாளும் வேஸ்ட் ஆயிருக்க தெரியுமா? ஹீரோ, ஹீரோயின், ஜூனியர் ஆர்ட்டிஸ்ட்டுங்க அத்தனை பேரும் ஷூட்டிங் இல்லாம இதுக்காகக் காத்திட்டிருந்தாங்க. எப்படி அழுது புரண்டு ரகளை பண்ணிச்ச! டைரக்டரு என் இட்ட சத்தம் போடறாரு... முடியலைன்னா சொல்லுய்யா,

சுபா

வேற குழந்தையை ஏற்பாடு பண்ணிக் கறேன்னு அத்தனை பேர் நடுவுலயும் கத்தினாரு தெரியுமா?''

காதுக்கு அருகில் அப்பாவின் கூச்சல் தாங்காமல் வள்ளி பயத்தில் பிதுங்கிக் கொண்டு அழுதாள். அப்பாவிடமிருந்து ஸ்பிரிங் போல் திமிறினாள். பொத்தென்று கோபமாக அவளை ஊஞ்சலில் போட்டார்.

''இப்ப கடைசியா என்ன சொல்றே? ஷூட்டிங் நாளைக்கு வருவியா, மாட்டியா?''

''டைரக்டர் உனக்காக இவ்ளோ பெரிய சாக்லேட் வாங்கி வச்சிருக்காராம், கண்ணு...''

''எனக்கு சாக்லேட் வேண்டாம், அம்மாதான் வேணும்...'' வள்ளி பொங்கிப் பொங்கி அழுதாள்.

அப்பா கோபமாகத் திரும்பிப் போகும் சத்தம் கேட்டது.

**வ**ள்ளிக்கு நினைவில் அம்மா ரிப்பன் போல சுருண்டு சுருண்டு வந்தாள். அம்மா விடம் எப்போதுமே அவளுக்குப் பிடித்த ஒரு வாசம் வீசிக் கொண்டிருக்கும். தூக்கத் தில் மறந்து விட்டால் கூட வள்ளியின் பிஞ்சுக் காலை எடுத் துத் தன் வயிற்றின் மீது போட்டுக் கொள்வாள்.

அம்மாவின் வயிறு சமீப காலமாக கின்னென்று ஆகி விட்டது. வள்ளி யைத் தூக்கினால் மூச்சிரைக்கும். பகலைப் போல ஆடி ஆடித்தான் நடக்க முடிந்தது.

''உன் தொப் பைக்குள்ள என் னம்மா?''

''உனக்கு ஒரு குட்டித் தம்பியோ, தங்கச்சியோ பொறக்கப் போவுது...''

''ஹை... இப் பவே வயத்தைத் தெறந்து பாக்கலா மாம்மா?''

''ஏய் கழுதை, அபசகுனமாப் பேசித் தொலைக் காத...''

''குழந்தை கிட்ட ஏன் இப்படி வள்ளுன்னு விழறீங்க?'' என்று அம்மா வள்ளியைத் தன்னோடு அணைத்துக் கொள்ள, வெறுப்பும், கோபமும் நிறைந்த விழிகளால் வள்ளி அன்றைக்கு அப்பாவைப் பார்த்தாள்.

ஆனால் அன்றைக்கு இந்த ஊஞ்சல் கிடையாது. இந்த மழமழ தரையுடன் கூடிய வீடு கிடையாது. விளையாடுவதற்கு அவளுக்கு இத்தனை பொம்மைகள் கிடையாது.

வெயில், மழையில் கறுத்துவிட்ட சரிந்த ஓடுகள். சில்லுப் பெயர்ந்த சிமெண்ட் திண்ணை, முற்றத்திற்கு மேல் துருப்பிடித்த கம்பிகள். சுண்ணாம்பு உதிர்ந்த சுவரில் ஆணிகள். ஆணிகளில் அம்மாவின் புடைவை, அப்பாவின் முறுக்கிய வேட்டி, வள்ளியின் தையல் போட்ட பாவாடை.

தார் சூடாத தெரு எல்லைகளில் கருட்டிக் கொண்டிருக்கும் புல். தலை சாய்ந்த வயலட் பூக்கள். சில வீடுகளின் விரிசல் விட்ட சுவர்களில் முளைத்திருக்கும் இலைகள்.. தெருவில் அம்மாவின் கையை உதறி விட்டு ஓடத் தோன்றும். ஏதாவது வண்டி வந்து விடப் போகிறதே என்று அம்மா பதறப் பதற தெருவைக் குறுக்கில்



கடந்து சிறு கற்களை பொறுக்கச் சொல் லும். பகல் நேரங்களில் வறண்டு கிடக்கும் வானம், ராத்திரியில் ஜிகினாவாகப் பூத்து விடும். மணலை வாரி இறைத்தது போல நட்சத்திரங்கள். அழுக்கு அப்பளம் போல நிலா.

அத்தனையும் தொறுங்கிப் போனதற் குக் காரணம் அந்தக் கடிதம். வெள்ளைக் கவரைக் கோணலாகக் கிழித்து உறக்கப் படித்த போது அப்பாவின் முகம் அபார மாகப் பூத்தது.

''மெட்ராஸ்லேர்ந்து லெட்டர் வந் திருக்கு... விளம்பரம் பார்த்து அனுப்பிச்ச போட்டோ பிடிச்சிருக்காம். வள்ளியை நேர்ல அழைச்சிட்டு வரச் சொல்லி எழுதி யிருக்காங்க. போக்குவரத்துச் செலவு பூரா சினிமா கம்பெனியே கொடுத்துடுமாம்....''

அன்றைக்கு மாலை கடைவீதியில் முழுசாய் நூறு ரூபாய் கொடுத்து அவளுக்கு அப்பா பூப்போட்ட சட்டை வாங்கினார். ரயில் பயணம் குதூகலமாய் இருந்தது. ஆட்டோவின் குர்ர் ஆச்சரியமாயிருந்தது. சென்னையின் அகலமான ரஸ்தாக்கள், அதில் விரையும் வாகனங்கள் எல்லாம் பிரமிப்பாயிருந்தது.

அப்பாவும், அவளும் மட்டும்தான். முன்னால் நிறைய இடம் விட்டுக் கட்டிய ஒரு ஹோட்டலின் குளுகுளு ரூமில் அவளைப் பார்த்தார்கள். பாடச் சொன்னார் கள். ஆடச் சொன்னார்கள். பழித்துக் காட்டச் சொன்னார்கள். சிரித்துப் பேசச் சொன்னார்கள்.

வெளியே வந்ததும் அப்பா தோள் வரை தூக்கி முத்தம் கொடுத்தார். விலை உயர்ந்த, அவள் அதுவரை சுவைத்தேயிராத சாக்லேட் வாங்கிக் கொடுத்தார்.

''வள்ளி, இனிமே உன் பேரு வள்ளி இல்ல.... வர்ணா.''

''இல்லப்பா, எனக்கு வள்ளிதான் பிடிச்சிருக்கு....''

''வர்ணான்னா கலர்... எவ்வளவு அழ கான பேரு தெரியுமா?''

அடுத்த ரயிலில் அம்மாவையும் அழைத்து வந்து விட்டார்கள்.

கண்ணாடி போட்டுத் தொப்பி வைத்த அங்கிள் சொல்லிக் கொடுத்தது போலவே செய்தாள். டேக் ஓகே என்று கைதட்டினார் கள். சில சமயம் அதையே திருப்பிச் செய்யச் சொன்னார்கள்.

வள்ளிக்கு ஜாலியாக இருந்தது. தினம் தினம் புது டிரெஸ். கேட்ட போதெல்லாம் சாக்லேட். டமாரக் கரடி. கை தட்டும் குரங்கு. சாவி கொடுத்தால் சுற்றி வரும் ரயில்.

முதல் சினிமா சூப்பர் ஹிட் என்று வள்ளிக்கு மூன்று நான்கு மேடைகளில் மெடல் மாட்டினார்கள்.

வசதியான வீட்டிற்கு மாறியதும், வேலை மும்முரமாகி விட்டது. தினம் கார் வந்து அழைத்துப் போவதும், அப்பா பிளாஸ்க், பிஸ்கெட் என்று சுமந்து கொண்டு பின்னாலேயே வருவதும் வேடிக் கையாக இருந்தது.

ஆனால் வள்ளிக்கு அம்மாவுடன், அவள் வயிற்றில் வளரும் தம்பிப் பாப் பாவுடன் அதிக நேரம் செலவு செய்ய முடிய வில்லையே என்று அடிக்கடி அழுகை வந்தது.

அறிமுகமற்ற மனிதர்கள் அவளைத் தூக்கிக் கொஞ்சுவது பிடிக்கவில்லை. அம்மாவின் வயிறு பெரிதாகிக் கொண்டே வந்து விட்டது. ஊரிலிருந்து பாட்டி வந் திருந்தாள். அவள் கொண்டு வந்த இரும்புப் பெட்டி அசிங்கமாயிருந்தது என்று அப்பா அவசரமாக கட்டிலுக்கடியில் மறைத்தார்.

அம்மா வள்ளியை இறுக அணைத்துக் கொண்டு அழுதாள்.

''நான் ஊருக்குப் போகப் போறேன், வள்ளி. நீ அப்பா கிட்ட ஒழுங்கா இருக் கணும், என்ன?''

''அம்மா, நானும் வரேம்மா.....''

''இல்லை கண்ணம்மா, உனக்கு முக்கியமான ஷூட்டிங் இருக்குதாம்... ஊர்லதான் குட்டித் தம்பி பொறக்கப் போறான். பொறந்ததும் தூக்கிக்கிட்டு உன்னைப் பாக்க இங்க ஓடி வந்துரு வேனே....''

''நீ நடிச்சாத்தான் பணம் வரும்...

---

## ஏழுமலையானையே காக்க வைத்த மந்திரி!

மத்திய திட்ட மந்திரி சுக் ராமுக்காகவும் அவருடைய குடும்பத்தாருக்காகவும் ஏழு மலையான் சமீபத்தில் ஒருநாள் முக்கால் மணி நேரம் அதிக மாக உறங்கினாராம். காலை 2:30 மணிக்கு ஆரம்பிக்க



வேண்டிய சுப்ரபாதம், மந்திரியின் வருகைக்காகத் தாமதித்து மூன்றேகால் மணிக்குத் தொடங்கியது. ஆனால் பாவம், ஜனாதிபதி சர்மா எப்போதும் ஏழுமலை யானைத் தரிசிக்க 2:30 மணிக்கு முன்னதாகவே வந்து விடுவாராம்.

ஆதாரம் : இந்தியன் எக்ஸ்பிரஸ்

- என். பங்கஜம்.

பணம் வந்தாத்தான தம்பிப் பாப்பாவுக்கு பொம்மை வாங்கலாம், தொட்டில் வாங்க லாம்... ஷூ வாங்கலாம்.. உன்னைப் பாத் துக்க காந்தாமணியக்கா இருக்காங் களே....''

அம்மா என்ன சமாதானம் சொன்ன போதும், வள்ளிக்கு விருப்பமே இல்லை. அம்மா ஏமாற்றி விட்டாள். வள்ளி தூங்கும் போது, சொல்லிக் கொள்ளாமல் கிளம்பி விட்டாள்..

அரை நாள் அழுது விட்டு வள்ளி படப் பிடிப்பிற்குப் போய் விட்டாள். ஆனால் நேற்றைக்கு காந்தாமணி சொன்ன சேதி கேட்ட பிறகு வள்ளிக்கு நிலை கொள்ள வில்லை.

''ஏ வள்ளி, எனக்கொரு முத்தா கொடு... உனக்குத் தம்பிப் பாப்பா பொறந் துடுச்சாம்... தந்தி வந்திருக்குது...''

வள்ளி கட்டிலில் குதித்தாள். தலை யணையை உருட்டி எறிந்து குதூகலித்தாள். ''எனக்கு உடனே அம்மாவையும், தம்பி யையும் பாக்கணும்'' என்று முரண்டு பிடிக்க ஆரம்பித்து விட்டாள்.

அம்மாவைப் பார்க்க வேண்டும் என்று சொன்னால் அது தப்பா? அதற்கு ஏன் அப்பா இந்தக் குதி குதிக்கிறார்?

**வ**ள்ளி ஊஞ்சலில் புரண்டாள். மெட் ராஸில் குறைவான நட்சத்திரங்கள் தானே இருக்கின்றன, ஏன்? மற்றதெல்லாம் தம்பிப் பாப்பாவைப் பார்க்கப் போய் விட்டனவா?

குளிர ஆரம்பித்தது. ஊஞ்சலிலிருந்து மெல்ல இறங்கினாள். உள்ளே போய்ப் படுத்துக் கொள்ளலாம் என்று பெட்ரூம் கதவைக் கண்ணீருடன் திறந்தாள்.

கட்டிலில் திறந்து வைத்த பெட்டியில் அப்பா உடைகளை அடுக்கிக் கொண்டிருந் தார். அவளை நிமிர்ந்து பார்த்து விட்டு வேலையைத் தொடர்ந்தார். ஐயையோ, அப்பாவும் ஊருக்குப் போய் விடுவாரா, அவளைத் தனியே விட்டு விட்டு?

நடுக்கத்துடன் அவர் அருகில் போய் நின்றாள்.

''எங்கேப்பா போறீங்க?''

''எல்லாம் உன் பிடிவாதத்தினால தான்... உங்கம்மாளைப் போய்ப் பாக்கப் போறோம்....''

''நெ...ஜ....ம்...மா... வா...ப்....பா?'' வள்ளி அப்பாவைக் கட்டிப் பிடித்து முத்த மிட்டாள். காந்தாமணியிடம் சேதி சொல்ல ஓடினாள். தன் உடைகளையும் அவசரமாக எடுத்துக் கொடுத்தாள்.

**ஆ**ஸ்பத்திரியில் அம்மா இளைத்து விட்டாள். வயிற்றைக் காணோம். வீட்டிற் குக் கொண்டு வந்து கட்டிலில் போட் டிருந்தார்கள்.



''அம்மா!'' என்று அலறிக் கொண்டே வள்ளி ஓடினாள். கட்டிலில் பாய்ந்தாள். அம்மாவைக் கட்டிப் பிடித்தாள்.

''பாத்து... பாத்து'' என்று அம்மா பதறி னாள்.

''தம்பிப் பாப்பா எங்கேம்மா?''

''தொடாம பாரு...'' அம்மா மெத் தென்ற துணியை மெல்ல விரித்துக் காட்டினாள்.

''தம்பிப்பாப்பா... சிரிடா... அக்கா வந்திருக்கேம் பாரு.... ஏம்மா இது கண்ணைத் தொறந்து என்னைப் பாக்கவே மாட்டேங்குது?''

''பொறந்து நாலுநாள் தான ஆவுது... பெரிசான உடனே உன்னை மாதிரி கல கலன்னு சிரிக்கும்....'' என்றாள், அம்மா, அப்பாவின் பக்கம் திரும்பிப் பார்த்து.

வள்ளி சில்லென்று இருந்த குழந்தை யின் உள்ளங்கால்களைத் தொட்டுத் தொட்டுப் பார்த்தாள். அம்மா வாகவமாக அதன் நனைந்த உடையை மாற்றும் போது பார்த்து வியந்தாள். அம்மா ஆட்சேபிக்க ஆட்சேபிக்க, அதற்கு மூன்று முறை முத்த மிட்டாள்.

''அம்மா, எனக்கு தம்பிப் பாப்பா ரொம்பப் பிடிச்சிருக்கு... நீ எப்பம்மா மெட்ராஸ்க்கு வருவே?''

''மூணு வாரம் ஆகும்.... ஏன் கண்ணம்மா?''

''சீக்கிரம் வந்துடும்மா... எனக்கு தெனத்துக்கும் தம்பியைப் பாக்கணும்... தம்பிப் பாப்பா, நீ மெட்ராஸுக்கு வா.... அக்கா சம்பாதிக்க உனக்கு நெறைய பொம் மையெல்லாம் வாங்கித் தரேன், என்ன?'' அப்பாவைப் பார்த்துத் திரும்பினாள். பொறுப்பான குரலில் சொன்னாள் :

''அப்பா, தம்பிக்கு இப்பவே கமலஹாசன், ரஜினிகாந்துன்னு நல்ல பேரா வச்சிருங்கப்பா... அப்புறம் மாத்த வேணாம்.....''

# முஸ்லிம் குழந்தைகளைக் கூடப் புலிகள் விட்டு வைக்கவில்லையே?

● ஆர். எஸ். கீதா ராணி, பழனி.

*? யாரை நினைத்துப் பெருமிதப்பட்டதுண்டு?*

! சமீபத்தில் மெரினா. நாடக மேடையின் கௌரவத்தைப் பலர் காற்றில் பறக்க விட்டுக் கொண்டிருக்கும் போது, காப்பாற்றியே தீருவது என்ற உறுதியுடன் 'கவிகாரம்' என்ற கனமான நாடகம் எழுதி உணர்ச்சி பொங்க நடிக்கச் செய்து அரங்கேற்றிய துணிவு பெருமைப்படக்கூடியதே. அரங்கம் நிறைய அதைக் காண ரசிகர்கள் வரவில்லை என்றாலும் வந்த ஒவ்வொருவரும் ஒரு நல்ல நாடகத்துக்கு ஆதரவு தந்தோம் என்று பெருமைப்பட்டிருப்பார்கள். மைனஸ் பாயிண்ட் ஒன்றும் உண்டு. அது, மெரீனாவின் வழக்கமான நகைச்சுவையை இதில் காண முடியாததுதான். அப்படி ஒரேயடியாக அதை ஒதுக்கியிருக்க வேண்டாம். உயர்ந்த விஷயங்களைச் சொல்ல நகைச்சுவை சிறந்த சாதனமே.

● பி. ஜெயப்பிரகாஷ், நவமலை.

*? "என்னை டிஸ்மிஸ் செய்தால் விபரீத விளைவுகள் ஏற்படும்" என்று பிரதமரை மிரட்டும் பங்காரப்பா பற்றி...?*

! கட்சிக்காரர்கள் எதிர்க்க, மந்திரிகள் எதிர்க்க, எம்.எல்.ஏக்கள் எதிர்க்க, எதிர்க்கட்சிகள் எதிர்க்க, மக்கள் எதிர்க்க, பத்திரிகைகள் எதிர்க்க, நீதிமன்றங்கள் கூட எதிர்ப்புத் தெரிவிக்க எப்படி பதவியில் நீடிக்கிறார், மத்தியில் என்ன மந்திரம் போட்டிருக்கிறார் என்பன பெரிய மர்மங்கள்!

● அ. முஸ்தபா, தக்கோலம்.

*? மாவீரர்கள் என்பவர் யார்?*

! கயிற்றுப் பாதை வழியே தொங்கி நகர்ந்த பயணிகள் கூண்டு, அதல பாதாள பள்ளத் தாக்கின் மீது கோளாறு காரணமாக நின்று போக, சாதகமற்ற சூழ்நிலையையும் பொருட்படுத்தாமல் ஹெலிகாப்டரில் வந்து, அப் பயணிகளைக் கயிற்று ஏணிப் படிகளில் ஏற வைத்துக் காப்பாற்றி அழைத்து வந்த விமானப் படையினர் மாவீரர்களே. அஞ்சாமல் ஹெலிகாப்டருக்கு இடம் மாறிய கூண்டுப் பயணிகளும் அப்படியே.

● இரா. ரெங்கசாமி, வடுகப்பட்டி.

*? தொடர்ந்து மழை பெய்தும், விளைச்சல் பெருகியும் அரிசி விலை மட்டும் குறையாதது ஏன்?*

! அரிசி விலை என்ன, எந்த விலைதான் குறைகிறது! கருவாடு மீனாகாது, கறந்த பால் மடி புகாது, ஏறிய விலை இறங்காது. இதை உணர்க. விலைவாசி உயரும் வேகத்தைக் கட்டுப்படுத்துவதுதான் நடக்கும் முயற்சியெல்லாம். அதற்கே தத்திங்கிணத்தோம் போடுகிறது அரசு.

● கே. ஆர். வேலுசாமி, வடக்கலூர்.

*? சுப்பிரமணியம் சுவாமி...?*

! காகிதப் புலி!

● ஜெயசுகந்தி, திருத்துறைப்பூண்டி.

*? எந்த ஆதாரத்தில் ஜெயலலிதா மீண்டும் அரியணை ஏறுவார் என்று ஆருடம் கூறியுள்ளீர்கள்? எதிர்ப்பு வலுக்கும் நிலையில் அனுதாபம் எப்படி பிறக்கும்?*

! மக்களின் நாடி பிடித்துப் பார்த்த ஆதாரத்தில்தான். கவிழ்ப்பது கஷ்டமல்ல. மத்திய அரசுக்கு அ.தி.மு.க. ஆதரவு நாடாளுமன்றத்தில் தேவை. கவிழ்த்து விட்டால் அனுதாப அலை மறுபடி அவரையே ஆட்சியில் அமர்த்தும். இது யதார்த்தம்.

● ஈ. டி. விஜயகுமார், ஈரோடு.

*? கட்அவுட் கலாசாரம் இந்தியாவிலேயே தமிழகத்தில் மட்டும் அதிகமாக இருக்கக் காரணம்?*

! தலைவர்களின் விருப்பு வெறுப்புகளைப் பொறுத்துத்தான் இதெல்லாம் அமைகிறது. இப்போது இந்த அநாகரிகம் பங்காரப்பாவையும் பிடித்திருக்கிறது என்பது அவரது சாதனை விழா படங்களைப் பார்க்கப் புரிகிறது. பங்காரப்பா பின்பற்றுகிறார் என்பதாலாவது வெறுத்து, நம் தலைவர்கள் கட்அவுட்கள், முழுப்பக்க விளம்பரங்கள் போன்ற அசிங்கங்களை விட்டொழித்தால் நல்லது.

● கே. எம். ரவிச்சந்திரன், மதுரை. ❑

*? பொற்காலம் என்று வர்ணிக்கக் கூடிய ஆட்சி எந்த நாட்டில் நடக்கிறது?*

❑ ரூ 25 பரிசு பெறுபவர் :
கே. எம். ரவிச்சந்திரன்,
பிளாட் 664, அண்ணா நகர்,
மதுரை – 625 020.













! சொக்கத் தங்கமாக இல்லாவிட்டாலும் 18 அல்லது 22 காரட் தங்கமான ஆட்சியைப் பல நாடுகளில் நாம் காண முடியும். உதாரணம் வேண்டுமானால் அமெரிக்கா. செல்வச் செழிப்பை விட்டுத் தள்ளுங்கள். அமெரிக்க ஜனாதிபதி பதவிக்குத் தேர்தலுக்கு நிற்கும் மூவரையும் சராசரி மக்கள் டீவி நிகழ்ச்சியில் கேள்விகள் கேட்டுக் குடைந்தெடுத்தார்கள் பாருங்கள். அதிலும் 'எங்கள் கேள்விக்கு நேரடி பதில் வேண்டும்; சுற்றி வளைக்காதீர்கள்; திசை திருப்பாதீர்கள்' என்று அதட்டினார்கள் பாருங்கள்! பொற்காலம் என்பது இதைவிட வேறு என்ன?

● எஸ். ஏ. யூசுப், அதிராம்பட்டினம்.

*? க. சுவாமியின் நோக்கம் ஆட்சியைக் கலைப்பது அல்ல; ஜெயலலிதாவின் தவறுகளுக்காக அவரைப் பதவி இறக்கம் செய்வதுதான். அதை வரவேற்காமல் வசை பாடுகிறீரே?*

! 1. நான் யாரையும் வசைபாடும் வழக்கமில்லை. ஒருவேளை கிண்டல் செய்திருக்கலாம். அது வசை ஆகாது. 2. 'ஜெயைத்தான் பதவி இறக்க எண்ணுகிறோம்; அ.தி.மு.க. ஆட்சி நீடிக்கலாம்' என்பது அபத்தம். ஜெ. இன்றி அ.தி.மு.க. இல்லை என்பது அனைவரும் அறிந்த ஒன்று. மக்கள் வோட்டுப் போட்டது ஜெவுக்காகத்தானே தவிர நெடுஞ்செழியனுக்காகவோ ராஜாராமுக்காகவோ அல்ல. 3. ஜெ. தவறு செய்யவில்லை என்று நான் கூறவில்லை. மாறாக ஒவ்வொரு தவறையும் வன்மையாக எடுத்துக் காட்ட கல்கி தயங்கியதில்லை. 4. நோயை விடச் சிகிச்சை மோசமாகி விடக் கூடாது என்பதே நம் கவலை. 'சரியான சிகிச்சை என்ன?' என்கிறீர்களா? அதற்கு வேறு கேள்வி கேளுங்கள்!

● வி. பி. மகராசி, மதுரை - 16.

*? சோனியா காந்தி, பிரேமதாசாவைச் சந்திக்க மறுத்தது சரியா?*

! மறுத்திருந்தால் அது சரியல்லதான். அவலை நினைத்துக் கொண்டு உரலை இடித்த கதைதான்.

● கே. என். பாலகிருஷ்ணன், கும்பகோணம்.

*? "சாஸ்திரி, நேரு, இந்திரா போன்றோர் வசித்த இல்லங்களையே பாதுகாத்து வரும் போது ஸ்ரீ ராமர் பிறந்த அயோத்தியில் அவருக்கு ஓர் ஆலயம் அமைக்கக் கூடாதா?" என்று கேட்கிறாரே ஜெயேந்திரர்?*

! அதை ஒரு மசூதியை இடிக்காமலேயே கட்ட முடியாதா என்றும் அவர் சேர்த்துக் கேட்டிருந்தால் மகிழ்ச்சி அடையலாம். அப்படி கேட்காததால் கம்யூனிஸ்டுகள் போன்றோரின் கண்டனத்துக்கு ஏற்கெனவே ஆளாகி விட்டார்.

● த. செல்வபாண்டி, சென்னை - 30.

*? ஊசல் சிக்கனம் என்று ஒரு பக்கம் கூறிக் கொண்டு முதல்வரின் இரண்டாயிரம் கார் ஊர்வலம் தேவை தானா?*

! அத்துடன் தனி விமானப் பயணமும் தேவையற்றதுதான். அந்நியச் செலாவணி நெருக்கடி அபரிமிதமாக இருக்கும் போது இதெல்லாம் ஆடம்பரச் செலவு மட்டுமல்ல; தேசத் துரோகமும் கூட.

● எம். சந்திரசேகர், மேட்டுமகாதானபுரம்.

*? முஸ்லிம்களின் குழந்தைகளைக் கூட விட்டு வைக்கவில்லையே, புலிகள்?*

! வடகிழக்கு மாநிலத்தில் முஸ்லிம்களின் நிலைகுறித்துப் புலிகளுடன் பேச்சு வார்த்தை ஆரம்பத்தில் நடந்தது. பிறகு முஸ்லிம்கள் அரசுப் பக்கம் சாய்ந்தனர். இது புலிகளுக்குக் கோபமூட்டியது. தவிர, சமீபத்தில் கொழும்புவில் முஸ்லிம் தலைவர்கள் புலிகளுக்கு எதிரான புனிதப் போர்க் குரல் கொடுத்தார்கள். இது புலிகளை ஆத்திரமூட்டியிருக்கிறது. வடகிழக்கு மாநிலத்தில் வசிக்கும் முஸ்லிம்களை வெறுக்கிறோம் என்று உணர்த்துவதை விட, போர்க் குரல் கொடுத்த முஸ்லிம் தலைவர்களை எச்சரிக்கிறோம் என்பதே இந்தப் படுகொலைக்கு உள் அர்த்தம். இத்தகைய காரண அலசல்கள் ஒருபுறமிருக்க, ஒரு பாவமுமறியாத 173 மக்களைக் கொன்று குவிப்பது என்பது மன்னிக்க முடியாத அரக்கத்தனம் ஆகும். இத்தகைய கொடுமைகளுக்கும் சொல்லொணாத் துன்பங்களுக்கும் விடிவு காலம் துப்பாக்கி முனையில் இல்லை; பேச்சு வார்த்தைகளிலும் அன்பு கரப்பதிலும்தான் உள்ளது.



# தாம்பரத்தைத் தாண்ட திணறலோ திணறல்!

இரவு ஒன்பது பத்து மணி. தெற்கே யிருந்து சென்னைக்கு வருகிறீர்கள். திருவள்ளுவரோ, பெரியாரோ, எம்.ஜி.ஆரோ - இல்லை உங்களுக்குச் சொந்தமான மாருதியோ. இரும்புலியூர் பாலம் தாண்டியவுடன் முப்பது நிமிஷத்துக்குள் நீங்கள் ஒரே ஒரு கிலோ மீட்டர் தூரம் பயணப்பட்டுத் தாம்பரம் பஸ் நிலையம் வந்துவிட்டால் ஒரு லட்சம் டாலர் என்று பந்தயம் கட்டலாம்.

குறுக்கும் நெடுக்குமாக நூற்றுக்கணக்கில் லாரிகள், இளைப்பாறிக் கொண்டு நிற்கும். நாலு வழி ஆறு வழிப் பாதையில்லை... இது நூறுவழிப்பாதை! முண்டியடித்துக் கொண்டு 'உர்... உர்' என்று இஞ்சினை உறும விட்டுக் கொண்டு பஸ் டிரைவர்கள் திணறுகிற திணறலில், பயணிகளே களைத்துப் போவார்கள். இறங்கி நடந்து விடலாமா என்று கூடத் தோன்றும்.

இந்தப் போக்குவரத்து நெரிசலைச் சீர் செய்யவே முடியாதா? சாலையோர பரோட்டாக் கடைகளும், ஏராளமான ஆட்டோ மொபைல் கடைகளும்... லாரி ஓட்டிகளின் 'நமக்கென்ன' மனப்போக்கும்... கடவுளே! போக்குவரத்துக் காவல் துறை என்று ஒன்று இயங்குகிறதா, அல்லது தூங்குகிறதா?

தாம்பரம் 'பஸ் ஸ்டாண்ட்' என்று சொல்வதே மிகப் பெரிய ஜோக். 'பேருந்து நிலையம்' என்று வர்ணிக்கப்படும் வளாகத்தில் ஐந்தாறு பஸ்கள் நின்றாலே திணறும். இந்த லட்சணத்தில் பல்லவன், திருவள்ளுவர், பெரியார், எம்.ஜி.ஆர் எல்லோரும் இடம் பிடித்து, ஆட்களை இறக்கிவிட்டு நகர்ந்தாக வேண்டும். ஓரத்தில் உள்ள உணவு விடுதிகளின் கழிவு நீர், பக்கெட் பக்கெட்டாய் வாரி வீசிக் கொட்டப்படும். பழங்களின் அழுகல்கள், குப்பை கூளங்கள் எல்லாம் கலந்து சூழ்ப்பிச் சேறாகக் கிடக்கும் மேடு பள்ளங்கள் உங்களைக் கால் வைக்கவே கூசப் பண்ணும். ஆஹா! அந்தச் சாக்கடை 'மணம்' இருக்கிறதே.... ஒரு முறை மூச்சை இழுத்து விட்டால் போதும்.. சர்வ ரோகங்களும் உங்கள் மேல் காதல் கொள்ளும். வறண்ட காலங்களிலேயே முழங்கால் சேறு என்கிற போது... சிறு தூறல் போட்டாலே போதும், எந்தச் சுகாதார இலாக்காவும் உங்களைக் காப்பாற்ற முடியாது. கீழே இறங்குவானேன்? பஸ்ஸிலேயே இருந்து விடலாம் என்றாலோ, இஞ்சி முறப்பாக்கள், பெப்ஸிக்கள், வண்ண வண்ணக் காகிதங்களோடு லட்சாதிபதி, கோடீசுவரன் ஏஜெண்டுகள் எல்லோரும் உங்கள் பிராணனை எடுப்பார்கள். புதிய வரவு - 'டட்டட்' டென்று வயிற்றில் ஓங்கி அடித்துக் கொண்டு உங்களிடம் காசு பெற முயலும் கூட்டம்!

பிராட்வேயில் புறப்படும் அவ்வளவு பேருந்துகளும் தாம்பரம் வழியேதான் தெற்கே போக வேண்டும். பிராட்வேயில் பதிவு செய்து கொண்டு தாம்பரத்தில் ஏறலாம் என்பது திருவள்ளுவர் தந்துள்ள வசதி. ஆனால் எந்தப் பேருந்து எங்கே நிற்கிறது என்பதைக் கண்டு பிடித்து நீங்கள் பஸ்ஸில் ஏறுவதற்குள் உங்களுக்கு இரத்த அழுத்தம் படுவேகமாய் ஏறி விடும். கூடிய வரை உங்களைத் திருவள்ளுவரில் ஏறிவிடாமல் கவனித்துக் கொள்வதில் டாக்ஸி வாலாக்களும், ஆம்னி ஏஜெண்டுகளும் படு உற்சாகம் காட்டுவார்கள்.

இந்த அவலத்தை ஒழுங்கு செய்யத் திருவள்ளுவரோ பெரியாரோ ஏதாவது ஏற்பாடு செய்யாவிட்டால் இங்கே பல பயணிகளுக்குப் பைத்தியமே பிடித்துவிடும். குறைந்த பட்சம் ஒலிபெருக்கி அறிவிப்பு... தனியார் வாகனங்களை நிறுத்த விடாமல் தடுப்பது... போன்றவை உதவலாம்.

– யெஸ்பால்

பரதன் அச்சகத்தில் அச்சிடுபவர் வி. முரளி, பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர்: வி. வைத்தியநாதன். ஆசிரியர் : கி. ராஜேந்திரன். இணை ஆசிரியர் : சீதா ரவி.
முகவரி : 47, ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காடுதாங்கல், சென்னை - 600 097. தொலைபேசி : ஆசிரியர் குழு அலுவலகம்: 2345624; சர்க்குலேஷன் மானேஜர் : 2345623; விளம்பரம் - சந்தா : 2345622; டைரக்டர் : 2345621.
ஆண்டுச் சந்தா - உள்நாடு : ரூ. 156/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 400/-; விமானத் தபால் : ரூ. 1050/-.
ஆறு மாதச் சந்தா - உள்நாடு : ரூ. 78/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 200/-; விமானத் தபால் : ரூ. 525/-.

REGISTERED NO. M. 4392
Registered as Newspaper in Srilanka

## தெரிந்து கொள்ளுங்கள்

# உங்கள் குழந்தையின் மேனிபற்றி

**ம**லர் என்பார் இரு என்பார் மழலைச் செல்வத்தை. அதன் மேனி மலரினும் மென்மை. இறகிலும் மிருது. ஆகவேதான் அதற்குத் தேவை உங்கள் சிறப்பான கவனிப்பு.

மென்மையான ஆடைகள், இதமான ஸ்பரிசம். அத்துடன் சிறப்பான சோப்பு—ஜான்ஸன்ஸ் பேபி சோப்.

ஆரம்பத்தில் சில வாரங்களுக்கு குழந்தையின் சருமத்தில் சில மாற்றங்கள் ஏற்படும். அதைப்பற்றி கவலைப்பட வேண்டாம். அது இயல்பான மாற்றம் ஆகும். சிறிது சிறிதாக மறைந்துவிடும்.

**சருமத்தில் பூனை முடி**: ஆரம்பத்தில் குழந்தையின் உடல் முழுதும் பூனை முடி போன்ற உரோமம் இருக்கும். அது இரண்டு வாரங்களுக்குள் தானாக உதிர்ந்துவிடும்.

**சினைப்பு மற்றும் கரப்பான்கள்**: இவை குழந்தையின் உடல் அமைப்பு (ஸிஸ்டம்) முழுதும் செயல்படத் துவங்காததால், அவை சிலநாட்களில் பொதுவாக மறைந்துவிடும்.

**பிறப்புப் புள்ளிகள்**: பிறக்கும்போது குழந்தையின் மேனியில் நீல சிவப்பு அல்லது பழுப்பு நிறத்தில் சில புள்ளிகுறிகள் ஏற்படுகின்றன. சில மாதங்களில் அவை மறைந்துவிடுகின்றன. குழந்தை வளரும்போது சில புள்ளிகள் காணப்படலாம்.

**தலையின் கவர்**: இளஞ்சிவப்பு நிறத்தில் குழந்தையின் தலை உச்சியில் காணப்படும் பத்தை போன்ற கரப்பான் ஆகும். அது சில சமயங்களில், குழந்தையின் முகம் உடல் அல்லது அரைப் பகுதியிலும் பரவும். அது மறைந்துவிடும். அதற்கு பேபி ஆயில் போட்டு இதமாக்கவும்.

**இளஞ்சிவப்பு சினைப்பு**: முகம் அல்லது சதை மடிப்பு போன்ற வியர்வை தங்கும் பகுதியில் இளஞ்சிவப்பு சினைப்புகள் ஏற்படும். இது அதிக உஷ்ணத்தால் ஏற்படுகிறது. குழந்தையை வெதுவெதுப்பான நீரில் குளிப்பாட்டவும். மென்மையான சோப்பு உபயோகிக்கவும். பின்பு மெல்லிய பருத்தி ஆடைகளை அணிவிக்கவும்.

**ஜான்ஸன்ஸ் பேபி சோப்**: குழந்தையின் மேனிக்கான சிறப்பான படைப்பு. தூய்மையான பொருட்களால் மட்டுமே தயாரிக்கப்பட்டது ஜான்ஸன்ஸ் பேபி சோப்— இதில் மென்மையான குழந்தை மணம் கலந்துள்ளது. ஜான்ஸன்ஸ் பேபி சோப்— ஜான்ஸன்ஸ் பேபி ஆயில் மற்றும் லனோலின் செறிந்துள்ளது. இவை குழந்தையின் சருமத்தில் ஈரப்பதம் உண்டாக்கி, மென்மையோடு வைத்துக் கொள்கிறது. இதில் சருமத்தில் அலர்ஜி மற்றும் புள்ளிகளை உண்டாக்கும் கடுமையான இரசாயனம் மற்றும் எரிச்சலான பொருட்கள் இல்லை. அதன் இதமான மென்மையான செயல், இயற்கை எண்ணெய்களை நீக்காமலே, சருமத்தை சுத்தமாக்குகிறது. உங்கள் குழந்தையின் மேனி பனித்துளி போல் மினிரும், ஒளிரும்.

**உங்கள் குழந்தைக்கு வேறு எந்த சோப்பையும் நம்புவீர்களா?**




**காரணம், குழந்தையின் மேனிக்கு விசேஷ கவனம் தேவைப்படுகிறது.**



"பேபி கேர்" என்ற இலவசப் பிரசுரம் பெற்றிட எழுதுங்கள்:
பேபி கேர் அட்வைஸர், ஜான்ஸன் அன்ட் ஜான்ஸன்,
30, ஃபோர்ஜெட் ஸ்ட்ரீட், பம்பாய்-400 036.
உங்கள் குழந்தையின் பெயர் மற்றும் பிறந்த தேதியையும் குறிப்பிடவும்.

**ஜான்ஸன் & ஜான்ஸன்**